# KATHA KARPAKAM

BOOK II

A Collection of Moral Stories in Tamil
Specially prepared to suit the Lower Forms








V. S. SWAMINATHAN
EDUCATIONAL PUBLISHER
MADRAS :: MADURA :: TINNEVELLY

Price 0—9—0

# கதா கற்பகம்

## மலர் 2



மாணவர்க்குகந்த சிறு கதைத் திரள்



துரைத்தனத்தார் அங்கீகரித்தது





பிரசுரகர்த்தர்

வி. ரு. சுவாமிநாதன்

மதராஸ்—மதுரை—திருநெல்வேலி

 [விலை 0-9-0

# கதா கற்பகம்

## மலர் 2

---

### 1. ராஜ்ய ஸ்ரீ

'விக்ரமார்க்கன் காலத்திலே' எனத் தொடங்கும் கதைகளை எத்தனையோ முறை நாம் கேட்டிருக்கிறோமன்றோ? அந்த விக்கிரமாதித்தனை அறியாதார் யார்? அந்தச் சமுத்திர குப்த விக்ரமாதித்தன் இப்பரத கண்டம் முழுவதும் பரவிய புகழுடைய ஒரு சக்கரவர்த்தி.

அவனுடைய வமிசத்திலே பிறந்தவன் பிரபாகரன் என்பவன். அவன் தன் தாய் வழியிலே குப்த வமிசத்தவன். மஹா சேநகுப்தா தேவீ என்பது அவன் தாயின் பெயர்.

பிரபாகரன் பேரரசனான சமுத்திர குப்தனுடைய வழித்தோன்றலே; என்றாலும் அவன் தன்னளவில் ஒரு சிற்றரசனே.

அவன் காலத்திலே, மங்கோலியரான ஹூணர் என்னும் ஒருவகைச் சாதியார், வட இந்தியாவிலே புகுந்து, கலகங்கள் செய்து, கொள்ளையடித்துக் குப்த ராஜயத்தைச் சின்னபின்னமாக்கி யிருந்தனர்.

அந்த ஹூணர்களின் அட்டகாசத்துக்குச் சிறிது முன்புதான் சக்கரவர்த்தியான மஹா சமுத்திரகுப்தன் காலமானான். அவன் இறந்தமையாலே அவன் கீழ் வாழ்ந்த

சிற்றரசர்கள் துணிந்து, பிறர்க்கு அடங்காதவராய்த் தாமே ஆளத் தலைப்பட்டனர். அவர்களுக்குள் ஒற்றுமைக் குறைவே மிகவும் இருந்தது. அதனாலே ஹூணர்களுக்கு அவர்களை அழிப்பது எளிதாயிற்று.

இவ்வாறு ஒரே குழப்பமாயிருக்கும் காலத்தில்தான் பிரபாகரன் வாழ்ந்தான். வடமேற்கு மூலையிலுள்ள ஒரு சிறு பகுதியான நிலமே அவனுடைய ராஜ்யமாயிருந்தது. அதன் தலைநகரம் தனேசுவரம்.

பிரபாகரன் மிகவும் தெய்வபக்தியுள்ளவன். பரம வைதிகன். அஞ்சாத நெஞ்சினன். அசையாத ஊக்கமுடையவன். பொருவிலாத போராற்றலுடையவன். ஆஜாநுபாகு. குலமானம் கருதும் கொள்கையன். பொள்ளென ஆங்கே முகம் வியரான். திடமான புத்தியுள்ளவன். குடிகள் துயரம் காணச் சகியாதவன். யானை, குதிரை, தேர், காலாட்படை இவற்றாலே செய்யும் போர்களில் வல்லவன். பகைவர்க்குச் சிங்கம் போன்றவன்.

இப்படிப்பட்டவன் தன் கால வேறுபாட்டை நினைந்து நினைந்து மனமுருகினான். நல்ல காலத்தை எதிர் பார்த்திருந்தான்; ஞாலம் கருதினும் கைகூடுமல்லவோ காலம் கருதி இடமறிந்து ஒரு வினையைச் செய்வாரேயானால்? அவர்க்கு எதுதான் முடியாது?

ஒரு நாள் அருணோதயகாலம். அவன் நதிக்கு நீராடச் சென்றான். அவன் மனதிலே தன் குல முன்னோனாகிய விக்கிரமாதித்தன் வீரச்செயல்கள் ஞாபகத்துக்கு வந்தன. "ஆஹா! உலகமெல்லாம் தன் பெயரை நிலை நாட்டிய வீரனன்றோ விக்கிரமாதித்தன்? அவன் குலத்திலே பிறந்தும் ஈனர்களான ஹூணர்களை அடக்க முடியாதிருக்கின்றேனே. 'பிரபாகரன் விக்கிரமாதித்தன் குலத்தவன்' என்று பிறர் சொல்வதைக் கேட்கவும் வெட்கமுண்டாகி

றதே. தன் பெருமை தோன்றுதற்குத் தன் குலப்பெருமை பேசுபவன் பேடி யல்லனே? எப்படியாவது இந்த ஹூணர்களை யடக்க வேண்டும். காலத்தை எதிர்நோக்கி யிருந்தது போதும். இனியும் வாளாவிருந்தால் உலகம் என்னை என்னதான் சொல்லாது? 'ஆள்வினை யின்மையே பழி' என்பதல்லவோ பெரியோர் கொள்கை? ஆதலால் இனிச் சற்றேனும் தாமதியாமல் நான் படை திரட்ட வேண்டும். ஹூணர்களை எதிர்த்து அழிக்க வேண்டும். அவர்களை ஒடுக்கிவிட்டால் ஏனைய சிற்றரசர் தாமே அடங்கிவிடுவர். கப்பமும் கட்டுவர். நான் ஏக சக்கரவர்த்தியாய்ப் புகழ்பெற வாழலாம். என் வீரமும் புகழும் விளங்கித்தோன்றும். அன்றெனில் உயர் குடிப் பிறந்தும் நான் பழிபட வாழ்வதே முடிவாகும். பொதுச் சொற் பொறுப்பவன் போர்வேந்தனவனே?" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். அவனுடைய நெஞ்சிலே வீரம் விஞ்சியது. பின் தன் மனதை ஒருவாறு சமாதானம் செய்துகொண்டு நதியில் இறங்கினன்.

சூரியோதயம் காணுமுன்பே நீராடி யெழுந்தான். காலைக் கடன்களை முடித்தான். அப்பொழுது அவன் மனம் மிகவும் அமைதி பெற்றிருந்தது. அவனுக்கு ஒருவிதமான புத்துணர்வு தோன்றியது. அப்படியே சில நிமிஷங்கள் அசைவற இருந்தான். அப்படி இருப்பவன் தன் கண்முன் வீரமா மகள் நிற்பது கண்டான். உண்மையில் அவன் ஒருவரையும் காணவேயில்லை. அவன் நெஞ்சிலே மிகுந்த எண்ணமே அவனுக்கு அத்தன்மையான உருவெளித் தோற்றம் உண்டாக்கியது.

அவன் கண்ட உருவெளித் தோற்றத்தில் வந்த வீரமா மகள், "ஏ பிரபாகர ராஜனே! நீயோ மிகுந்த தெய்வ பக்தி யுடையாய். அறநெறி வழுவாதாய். குடிகளிடம் அன்புடையாய். உயர்குடியிலே பிறந்தாய். அருளுக்கு

உறைவிடமானுய். ஆண்மையிற் சிறந்தாய், அடக்கத்தில் உயர்ந்தாய். ஆதலால் உனக்குச் சர்வ மங்களமும் உண்டாகுக. நீ இந்த ஹூணரைப் போரிலே தாக்கு; வெற்றியே பெறுவாய். நீ எண்ணியது போலவே ஏனைய சிற்றரசரும் உன் அடிபணிவார். நீ ஏக சக்கரவர்த்தியாய் இவ்வுலகினை நீடுழி ஆண்டு வாழ்வாயாக" என்று சொல்லியதுபோலத் தோன்றியது. ஊக்கமுடன் எழுந்தான்.

எழுந்தவன், "இளையன் இவன் என்று உளையும்படி என்னை இகழ்ந்தவரைப் போரிலே முறியடிப்பேன். அங்ஙனம் செய்யேனுயின் விக்கிரமாதித்தன் குலத்தவன் நான் இல்லை. மறுபிறப்பிலே பேடியாய்ப் பிறந்து பெரும்பழி கொள்வேனுக" என்று ஒரு சபதம் செய்துகொண்டான். அரண்மனை மீண்டான். மந்திரி பிரதானியரைக் கூட்டினுன். அவர்களிடம், தான் கண்டதும் கேட்டதும், தான் செய்துகொண்ட சபதமும் சொன்னுன்.

அவர்கள் அவற்றைக் கேட்டு, "மகாராஜனே! நாம் இனிப் போருக்கு எழுங்காலம் அடுத்து விட்டது. ஆதலால் தாமதம் செய்யாமல் படைதிரட்ட வேண்டியதே" என்றனர். அன்று முதல் பிரபாகரன் தன் படைகளைப் பெருக்குவானுனுன்,

ஹூணர்கள் செய்யும் கொடுமைகளுக்கு ஆளாய்த் தவித்த சிற்றரசர் பலர். அவர்கள் பிரபாகரனைச் சேர்ந்து படைத்துணையானுர்கள். படையோ மிகவும் திரண்டு விட்டது. தன்வலியும் பகைவர் வலியும் சீர்தூக்கிப் பார்த்துப் பிரபாகரன் போருக்குப் புறப்பட்டான். கண்டோர்க்கு "பார் சிறுத்ததனுலே படை பெருத்ததோ? படை பெருத்தலினுலே பார் சிறுத்ததோ?" என்ற ஐயம் உண்டாகப் படை கிளம்பியது.

இரவேது? பகலேது? மேடேது? பள்ளமேது? காடேது? நாடேது? ஆற்றுவெள்ளப் பெருக்குப்போல

இடையூறுய் எதிர்த்தாரையெல்லாம் அப்படை மதியாது அழித்துச் சென்றது. ஆனல் தலைசாய்ந்து கொடுக்கும் நாணலைத் தழுவி ஆறு செல்வதுபோல் பணிந்தார்க்கு இதம் செய்து சென்றது.

ஹூணரும் முரட்டுக் குணமுடைய சாதியார். ஆதலால் பிரபாகரனை அஞ்சாது எதிர்த்தனர். என்றாலும் அவர்கள் ஒழுங்கான படையுடைய அரசரில்லை. கொள்ளைக் கூட்டத்தாரே. அதனல் ஒழுங்காக அணிவகுத்துப் படை யெடுத்து வந்த பிரபாகரனுக்குத் தீங்கு செய்யவோ அல்லது அவன் படையை நெடுநாள் எதிர்த்து நிற்கவோ அவர்களால் முடியவில்லை. சில நாளிலே ஹூணர்கள் அடங்கி ஒடுங்கிவிட்டனர். அவரிற் பலர் அஞ்சி ஓடினர்.

பிரபாகரன் ஹூணர்களை அடக்கிய பின்பு தன்னைச் சேராமலும் ஹூணருக்கு உதவியாயும் இருந்தவரைத் தாக்கினன். அவர்கள் அஞ்சி அடிபணிந்து அபயம் வேண்டினர். அவர்களை மன்னித்து ஒவ்வொருவரும் இவ்வளவு பொன் கப்பம் கட்டவேண்டும் என்று பணித்தான். அவர்களும் அதற்கு இணங்கினர்கள்.

பிரபாகரன் வெற்றிப் பிரதாபம் எங்கும் பரவியது. சிற்றரசர்கள் எல்லோரும் அவனைத் தங்கள் தலைவனென ஒப்புக்கொண்டனர். பிரபாகரனும் அதை நிலை நிறுத்தித் தான் சக்கரவர்த்தி என்னும் பட்டஞ்சூடி மகுடாபிஷேகம் பண்ணிக்கொண்டான். தான் முன் நினைத்தவாறே தன் வீரமும் புகழும் நிலைபெறச் செய்தான். குலத்தின் பெருமையையும் கெடாமற் காத்தான். குப்த வமிசத்தார்க்குக் கௌரவ முண்டாக்கினன்.

வீரமாமகளை மணந்த அவன், அழகிலே சிறந்த யசோவதி என்பவளை மணம் புரிந்து கொண்டான். யசோவதி அழகிலே சிறந்தது போலவே குணத்திலும் உயர்ந்தவள்.

அவளுடன்கூடி இன்புற்றுப் பிரபாகரன் அரசியல் நடத்தி வந்தான்.

நாளடைவிலே யசோவதி மூன்று குழந்தைகளை யுடையவளானாள். அவற்றுள் முதலிரண்டு ஆணும், மூன்றாவது பெண்ணும் ஆகும். மூத்த பிள்ளைக்கு ராஜ்ய வர்த்தனன் என்று பெயர். இரண்டாவது பிள்ளைக்கு ஹர்ஷ வர்த்தனன் என்று பெயர். மூன்றாவது குழந்தைக்கு ராஜ்யஸ்ரீ என்று பெயர். ஹர்ஷ வர்த்தனன், ராஜ்ய வர்த்தனனுக்கு ஐந்து வயதிளையவன். ராஜ்யஸ்ரீ ஹர்ஷனுக்கு இரண்டு வயதிளையவள். இம்மூவரும், நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தனர். தமையன்மார் இருவர்களுக்கும் தங்கையிடத்தில் அளவிலாத அன்பு.

பிரபாகரன், தன், மக்களுக்கு அரசர்க்குரிய கலைகளில் நல்ல தேர்ச்சியுண்டாக, நல்லாசிரியரைக்கொண்டு கற்பித்தான். தந்தை மகனுக்குச் செய்யும் கடமை சபா நாயகமாய் அவனை வீற்றிருக்கச் செய்வதன்றோ? மக்கள் மூவரும் சகல கலைகளிலும் வல்லவராய் விளங்கினார்கள். சகல குண சம்பன்னருமாயினார்கள். 'தமக்கு நிகர் தாமே' எனச் சிறந்தார்கள்.

இங்ஙனம் இருக்கும் நாளில் ராஜ்யஸ்ரீ மணத்துக்கு உரிய பருவத்தளானாள். திருமகளும் அவள் அழகிற்கு ஒப்பாவளோ என்று ஐயுறும்படி சிறந்து விளங்கினாள். அவள் அழகுக்கு ஏற்றபடியே கல்வியும் அவளிடம் சிறந்தது. தேவ பாஷையான சம்ஸ்கிருதத்திலே அவள் உபந்யசிக்கவும் வல்லள். ராஜதருமமோ, வைதிக தருமமோ, லௌகிக தருமமோ இவற்றுள் அவள் அறியாதன ஒன்றுமில்லை. இப்படிப்பட்ட ராஜ்யஸ்ரீயை, அவள் தந்தையான பிரபாகரன், கிரகவர்மன் என்பவனுக்கு மணஞ்செய்து கொடுத்தான்.

கிரகவர்மன் கன்னேசி நாட்டரசன் மகன். அவன் தந்தை பெயர் அவந்தி வர்மன்.

கிரகவர்மன், ராஜ்யஸ்ரீயை மணந்தபின் சில தினங்கள் தனேசுவரத்திலே தங்கியிருந்தான். பின்னர், பிரபாகரனிடம் விடை பெற்றுக் கொண்டு கன்னேசிக்குப் புறப்பட்டான். ராஜ்யஸ்ரீ தன் தாய் தந்தையர், தமையன்மார் இவர்களைப் பிரிய நேர்வதை எண்ணி வருந்தினள். தன் கணவனுடன் செல்வதை எண்ணி மகிழ்ந்தாள். ஒருவாறு பிரியாவிடை பெற்றுத் தானும் கன்னேசிக்குச் சென்ருள். கன்னேசியிலே கிரகவர்மன் காட்டிய அன்பினலே தன் பெற்ருேரையும் உடன்பிறந்தாரையும்விட்டு வந்ததையும் மறந்தாள். தம்பதிகள் இருவரும் இன்பக்கடலில் திளைத்து விளையாடினர்.

சில வருடங்கள் கழிந்தன. பிரபாகரனும் மூப்பு முற்றும் பருவத்தை யடைந்தான். அவன் புதல்வர் இருவரும் சிங்கக் குட்டிகள் என்னும்படி நல்ல யௌவனத்தை யடைந்தனர். பிரபாகரன் தன் முதுமையால் கிழட்டுச் சிங்கம் போன்ருன்.

ஹூணர்கள், பிரபாகரன் வயது முதிர்ந்தவனுனன் என்று அறிந்து, சற்றே துணிவு கொண்டனர்; சிறு கிராமங்களிலே புகுந்து கொள்ளையிட்டுத் தொல்லை விளைவித்தனர். குடிகள்பாடு பெருந்துன்பமாக முடிந்தது. குடிகள் தொல்லை பொறுக்க முடியாமல், பிரபாகரனை அடைந்து முறையிட்டனர்.

குடிகளுடைய முறையீட்டைக் கேட்ட பிரபாகரன் மிகுந்த கோபங்கொண்டான். "என் அருமைக் குடிகளே! அஞ்சாதீர்கள்! அந்த ஹீனர்களான ஹூணர்களை அடக்குமாறு என் மைந்தரையனுப்பி உதவுகின்றேன். சிங்கம் குட்டியே யாகுலும் யானையின் மத்தகத்

தைப் பிளக்கப் பின் வாங்காது! அதுபோல என் மைந்தர் இளையரே யானாலும் அந்த ஹூணர்களுக்கு இளையார்" என்று தேற்றி அவர்களை அனுப்பினான்.

பிறகு தன் மக்களை வரவழைத்தான்; அவர்களை நோக்கி, "என் அருமைப் பிள்ளைகாள்! நான் சொல்வது கேளுங்கள். நான் உங்களைப்போன்ற வாலிபனாய் இருக்கையில் இந்த ஹூணர்கள் செய்த கொட்டத்தை ஒட்ட அடக்கிவிட்டேன். அவர்களும் அஞ்சி அடங்கிக் கிடந்தனர். இப்பொழுது நான் கிழவனாய்விட்டேன் என்று அஞ்சாது கொள்ளையிட்டுக் குடிகளை அவர்கள் வருத்துகின்றார்களாம். உண்மையே. நான் கிழவனாய்விட்டேன். இனிப் போர்க்களத்தில் வாளெடுத்துப் போர் செய்யமுடியாததான். அதனால் நீங்கள் உங்கள் வீரத்தையும் என் பெருமையையும் காக்கவேண்டும். உடனே தக்கபடையை அழைத்துச்சென்று அந்த ஹூணர்களை எதிர்த்து அடக்கி வாருங்கள்" என்றான்.

அவனுடைய மக்களும் தந்தையிட்ட கட்டளைக்கு இணங்கினார்கள். அவர்களோடு ஒரு பெருஞ்சேனையும் உடன் சென்றது. ஹூணர்கள் கொள்ளையடிக்கிறார்களெனச் செய்தி எட்டிய ஊர்களிலே சென்று பிரபாகரன் மைந்தர் அவர்களைத் தாக்கினர். ஹூணர்கள் அஞ்சியோடிவிட்டனர்.

இப்படியாகச் சென்ற ராஜ்யவர்த்தனனும் ஹர்ஷனும் வடக்கே இமயம் வரையிலும் சென்றுவிட்டனர். இமயமலைப் பிரதேசம் கிட்டியதும் அவர்கள் சிலநாள் ஓய்வெடுத்துக்கொண்டனர். ஹூணர்கள் செய்தியொன்றும் தெரிந்திலது. அதனால் அவர்களை முற்றிலும் அடக்கிவிட்டோம் என்றே அரசகுமாரர் இருவரும் எண்ணி மகிழ்ந்தனர்.

அவர்களிலே ஹர்ஷனுக்கு வேட்டையிலே மிகுந்த பிரியம். அதனால் அவன் தன் வீரரிற் சிலரை உடன்

கொண்டு இமயமலை யடுத்த காட்டினுள் புகுந்தான். வேட்டைகள் ஆடும் விளையாட்டில் இன்புற்ருன்.

அவன் ஒரு நாள் கொடிய மிருகங்களை வேட்டை யாடிய களைப்பினுல் ஓர் ஆலமரக்கொம்பின்மேல் அயர்ந்து உறங்கினுன். உறங்கும்போது ஒருவன் அதிவேகமாய் ஓடோடியும் அவனைச் சென்று அடைந்தான். ஹர்ஷன் திடுக்கிட்டு விழித்தான். வந்தவனைப் பார்த்தான். வந்த வன் தன் தகப்பனுருடைய அந்தரங்க வேலையாள் என்று தெரிந்து கொண்டான்.

அவனை, "என்ன விசேஷம்?" என்று ஹர்ஷன் கேட்கு முன்னமே வந்தவன் ஓர் ஓலையை நீட்டினுன். அவ் வோலையிலே அவன் தந்தை மிகவும் நோய் வாய்ப்பட்டு மரணத்தருவாயில் இருக்கிருர் என்று எழுதியிருந்தது.

உடனே தன் குதிரை யேறிப் புறப்பட்டுவிட்டான். அப்பொழுது ராஜ்ய வர்த்தனன் எங்கோ சில பௌத்த முனிவர்களைக் காணச் சென்றிருந்தான். அவன் வருமள வுங்கூட ஹர்ஷனுக்கு அங்குப் பொறுத்திருக்க முடிய வில்லை. ஹர்ஷனுக்கு ஊணும் உறக்கமும் வேண்டா வாயின. ஒரே மூச்சாகத் தனேசுவரம் போய்ச் சேர வேண்டும் என்பதே அவன் எண்ணம். அதனுல் இடை யிலே எங்கும் தங்காமல் தன்னூரையே சென்றடைந் தான்.

அடைந்தவன் நேரே தன் தந்தை யிருக்கும் இடமே சென்ருன். படுக்கையில் மெய்ம்மறந்து கிடக்கும் தந்தை யைக் கண்டான். அருகிலே சென்று, மெல்ல, "அப்பா! அப்பா!" என்ருன்.

மகன் குரல் காதிலே விழுந்ததும் பிரபாகரன் கண் களைத் திறந்தான்; ஹர்ஷனைக் கண்டான். கண்கள் ஆநந்தக் கண்ணீர் சொரிய மெல்ல எழுந்தமர்ந்து மகனை

ஆலிங்கனம் செய்து கொண்டான். சிறிது நேரம் அப்படியே இருந்தான். பின்பு தன் மகனைப் பார்த்து, "ராஜ்யவர்த்தனன் எங்கே?" என்றான். "அவர் பௌத்த முனிவர்களைத் தெரிசிக்க வனத்துள் நெடுந்தூரம் சென்று விட்டார். உங்கள் உடம்பின் அசௌக்கியச் செய்தியை அறிந்ததும் உடனே புறப்பட்டுவிட்டேன். அவர் வந்தால் இச்செய்தியைச் சொல்லும்படி என் ஆட்களுக்குக் கூறியிருக்கிறேன். அவரும் கூடியசீக்கிரம் வந்துவிடுவார்" என்றான். அவன் சொற்களைக் கேட்ட பிரபாகரன், "நன்று, நீ வந்தது சரிதான். உன் தாயைக் கண்டாயோ?" என்றான். "இல்லை" என்றான் மகன். "அப்படியானால் அவளையும் கண்டுவா" என்று தன் மகனை அரசன் அனுப்பி விட்டான். ஹர்ஷன் போன பின்பு தன் மூத்த மகன் வராததை எண்ணிப் பிரபாகரன் மனம் வருந்தினான்.

தாயைக் கண்டு மீண்ட ஹர்ஷன் அரண்மனை வைத்தியரைக் கண்டான். தந்தையின் தேக நிலையைப்பற்றி விசாரித்தான். வைத்தியர் தலைவன், "மறுநாள் அறிந்து சொல்லுகிறேன்" என்று சொல்லிப் போனான். அன்றிரவிலே தானே அவன் ஓர் ஓலையில் "இனி அரசன் பிழைப்பது தெய்வத்தின் அருளாலேதான் ஆகவேண்டும்" என்று எழுதி ஹர்ஷனுக்கு அனுப்பினான்.

ஹர்ஷன் வைத்தியர் தலைவன் ஓலையைக் கண்டதும் மிகவும் வருந்தினான். அவன் வருந்துவது தெரிந்து அதன் காரணத்தை யசோவதியும் அறிந்து கொண்டாள்.

அவளுக்குத் தான் விதவையாய் வாழ விருப்பமில்லை. அக்காலத்திலே பெண்டிர் உடன் கட்டை ஏறுதல் வழக்கம். யசோவதி அது தானும் செய்ய விரும்பவில்லை. ஏனென்றால் கணவன் இறந்த பின்பும் கொஞ்ச நேரம் தான் விதவையாய் உயிரோடிருக்க நேருகிறதாம்! அத

ஞலே அரசன் பிழைக்க மாட்டான் என்று அறிந்ததும். அவனுக்கு முன்னுலே தன் உயிரைவிடத் துணிந்தாள், அரண்மனையில் உள்ளவர்க்கு ஏராளமாகப் பொன்னும் மணியும் கொடுத்தாள். தன்னுடைய ஆடையாபரணங்களை ஏழையர்க்கு வழங்கினுள். நதி தீரத்திலே தீ வளர்க்க ஏற்பாடுகள் செய்தாள். அரசியின் ஆணையல்லவா? தீயும் மூட்டப்பட்டது. யசோவதி கணவனைத் தியானித்து அத்தியிலிறங்கும் சமயம். ஹர்ஷன் அங்கே ஓடோடியும் வந்து விட்டான்.

"அம்மா! இது என்ன காரியம்? எனக்குத் துணையாவார் யார்? தந்தையாரையும் தாயாகியஉங்களையும் ஒரே காலத்தில் இழந்து எப்படி மனஞ்சகிப்பேன்? இப்படி நிராதரவாக என்னையும் என் தமையனுரையும் விட்டுப் பிரியலாமா? நாங்கள் உங்கள் அன்புக்கு உரியரல்லவோ? ஏதாவது தவருய் நடந்துகொண்டோமா? எங்களை நிர்க்கதியாய் விடலாகாது" என்று காலைப்பிடித்துக்கொண்டு அழுது வேண்டினன்.

அவனைத் தேற்றி, யசோவதி. " அப்பா மகனே! உலகத்திலே பெண்களுக்குப் பொற்ருலியோடு எவையும் போம் அல்லவா? விதவையாய் வாழ்வதுபோலக் கேவலம் ஒன்றுமில்லை. பெற்ற தாயே எனினும் சுப காரியத்திடையே விதவை வந்தால் அபசகுனம் என்னுமே இவ்வுலகம். அதனல் விதவையாய் வாழ நான் விரும்பவில்லை. அவ்வளவே யல்லாமல் உங்கள்மேல் எனக்கு என்ன கோபம். நீங்கள் என் அருமைக் குழந்தைகள் அல்லவா? இதை மட்டும் தடுக்கவேண்டா" என்று சொல்லித் தீப் பாய்ந்து விட்டாள். ஹர்ஷனுக்கு ஒன்றும் சொல்ல முடியவில்லை. கண்கள் தாரை தாரையாய் நீர் பொழிய ஸ்தம்பம் போல் அசைவற்று நின்ருன். யசோவதியோ சிறிது நேரத்திலே வானுலக மங்கையார்க்கு நல்விருந்தாயினுள்.

பின் ஹர்ஷன் தன் தகப்பனர் இருக்குமிடம் சென்ருன். அவரோ மரணவஸ்தையில் இருப்பதைக் கண்டான். கண்ணீர் விட்டுக் கதறலானன். பிரபாகரன் அழுது புலம்பும் தன் மகனை, "அப்பா குழந்தாய்! அழாதே. நீ க்ஷத்திரியன் அல்லவோ? தைரியமாயிரு. இவ்வுலக வாழ்க்கை நிலையற்றது. என் தந்தையும் தன் தந்தையைத் தேடித்தானே போனர்? நீ உன் தமையன் வந்ததும் அவனுக்கு என் ஆசியைத் தெரிவிப்பாயாக. அவனும் நீயுமாக நீள் உலகை ஆண்டு நீடுவாழ்வீர்களாக" என்று மெல்லிய குரலிற் சொல்லி உயிர் துறந்தான். ஹர்ஷன் பட்ட துன்பத்துக்கு அளவேயில்லை.

தன் தாய் தந்தையர்க்குச் செய்யவேண்டிய ஈமக் கடன்களை எல்லாம் செய்து முடித்து, ஹர்ஷன், ராஜ்ய காரியத்திலே தலையிடாதிருந்தான். தன் தமையனுக்கு ஆளனுப்பினன்.

ஹர்ஷனுடைய துயர் மிகுதியைக் கண்டு, அங்குள்ள பெரியோர்கள், "நீர் இப்படியிருந்தால் இங்கு வரும் உம்முடைய தமையனர் அரசை வெறுத்து விடுவார். அவர் இயல்பாகவே ஆசை முதலியன இல்லாதவர். நீர் சற்று மனவமைதியோடும் இருந்தாலன்றே அவரை மன்னனக்கி வாழ முடியும்? நீரும் ராஜ்ய காரியத்தை கவனிக்கவில்லை. தமையனரும் வெறுத்துவிடுவார்; என்ருல் நாங்கள் யாரைத் துணைகொண்டு வாழ்வோம்? ஆதலால் மனந் தேறியிருத்தல் வேண்டும்" என்றனர். ஹர்ஷனும் அது தன் கடமையென்று எண்ணினன்.

இதற்குள் ராஜ்யவர்த்தனன் படைகளோடு தனேசுவரம் வந்து சேர்ந்தான். எங்குப் பார்த்தாலும் துக்கக் குறிகள் கண்டு மனம் துணுக்குற்ருன். அரண்மனை அடைந்ததும், தன் தம்பியால் நிகழ்ந்தன அறிந்தான். தந்தை தாயாருடைய பிரிவாற்ருது வருந்தினன். பின்பு

தம்பியை அழைத்து, "ஹர்ஷா! நான் இவ்வுலக வாழ்க்கையை விரும்பவில்லை. நான் பௌத்த சந்நியாசிகளுடன் சேர்ந்து நோன்புகள் ஆற்றி வாழவே விரும்புகிறேன்" என்ருன்.

"எனக்கு மட்டும் இந்த அரசச் செல்வம் விரும்பத் தக்கதாமோ? யானும் இதை விரும்பேன். தாயையும் தந்தையையும் இழந்தேன். தமையனுரான உம்மைப் பிரியவும் நேர்வனே? மாட்டேன். நான் இந்நாட்டிலே இருக்க வேண்டுமாஞல் நீர் அரசராய் முடிசூடி யிருக்க வேண்டும். நீர் பௌத்த சந்நியாசியாஞல் நாம் உம்முடைய சிஷ்யனுவேன்" என்று ஹர்ஷன் சொன்னன். அவனுடைய உண்மையான அன்பைப் பாராட்டினர் அங்கிருந்தவர் எல்லோரும்; ராஜ்யவர்த்தனன் தன் தம்பியின் குணத்தை வியந்தான்.

அப்பொழுது கால் நிலத்தில் படாமல் காற்றுப்போல் விரைந்தோடி ஒருவன் வந்தான். அவனே அவிழ்ந்த தலையன். நெகிழ்ந்த ஆடையன். துடிக்கும் நெஞ்சன். அருவிக் கண்ணினன். புழுதி மேனியன். இரத்தம் பீறிய அடியினன், அவன் ராஜ்யவர்த்தனன் திருவடிகளிலே சாட்டாங்கமாய் விழுந்து பணிந்தான்.

அரச குமாரரும் மற்றவரும் திடுக்கிட்டனர். வந்து பணிந்தவனை, "அப்பனே நீ யார்? உனக்கு வந்தடுத்த தென்ன?" என்று ராஜ்ய வர்த்தனன் வினவினன்.

"சுவாமி! நான் கன்னேசி நாட்டினன். கிரகவர்மரைத் தேவகுப்தன் கொன்ருன். உங்கள் தங்கையான ராஜ்யஸ்ரீ தேவியையும் சிறை செய்துவிட்டான்" என்ருன்.

ராஜ்ய வர்த்தனனுக்கு வருத்தம் உண்டாகவில்லை. அதற்கு மாருய் ஆருப் பெருங்கோபமே எழுந்தது. "தேவ

குப்தன் மாளவதேசத்து அரசன்தானே?'' என்றான். "ஆமாம் சுவாமி"! என்றான் வந்தவன்.

"அந்த மாளவதேசத்தவரையும் அவர்க்கு அரசனையும் கொன்று என் கோபமாறுவேன்" என ராஜ்யவர்த்தனன் சபதம் செய்தான். அப்பொழுது அவன் கண்கள் சிவந்து காட்டின. அரும்பிய இளமீசைகள் துடித்தன. புருவங்கள் நெற்றி முற்றச்சென்றன. கோபச் சிரிப்பும் அவனுக்கு வந்தது. வாயோ புகை கக்கியது. தீப்பொறிகளைக் கண்கள் சிந்தின. ஏந்திய வாள்கொண்டு ஏறென நின்றான். அவன் கோபத்தைக் கண்டு அவன் தம்பியாகிய ஹர்ஷனும் பயந்துவிட்டான் என்றால் பிறரைப் பற்றிச் சொல்வதென்?

ராஜ்ய வர்த்தனன் வந்தவனைப் பார்த்து, "நாம் தேவகுப்தனையும் அவனைச் சேர்ந்தாரையும் கொல்வதெனத் தீர்மானித்து விட்டோம். அதிசீக்கிரமே படையெடுத்துச் செல்வோம். ஆனாலும் நம் கிரகவர்மருக்கு அவன் எப்படி தீங்கிழைத்தான், விவரமாய்ச் சொல்'' என்றான்.

வந்தவன், "ராஜாதி ராஜனே! கிரகவர்மர் ஒரு நாள் தம்முடைய கொலு மண்டபத்திலே யிருந்தார். அப்பொழுது ஒரு வனவேடன் அவர் திருமுன் வந்தான். இரு கைகளையும் கூப்பித் தொழுது நின்றான். அவனைச் 'செய்தியென்ன?' என்று கேட்டார். அவன் கண்கள் நீர்வடிய நின்று, "மகாராஜனே! இன்று நதிதீரத்திலே சந்தனக் கட்டைகளை அடுக்கி எரிமூட்டி வளர்த்து அதிலே யசோவதி மகாராணியார் சதியாய் இருந்தார் எனக்கேட்டோம். எம் தலைவன் அதனை உங்களுக்கு அறிவிக்கச் சொன்னார். அந்த மகாராணியார் அப்படிச் சாவதற்கு மஹா ராஜாதிராஜரான பிரபாகரர் இறந்துபோனதே காரணமாம்'' என்றான். கிரகவர்மர் மிகுந்த துக்கத்தை யடைந்தார். தம்முடைய காதல் மனைவியிடம் அதைத் தாமே சென்று

தெரிவித்தார். அந்த அம்மையார் தம்முடைய தாய் தந்தையர் இறந்தமைக்கு மிகவும் மனம் வருந்தினர்."

"இப்படி அரண்மனையில் எல்லோரும் துக்கம் கொண்டாடுகையில் தேவகுப்தன் போர்புரிய வந்தான். அவன் வஞ்சனையாகத் தன்படைகளில் அநேகரைக் கன்னேசியிற் புகுத்திவிட்டான். அவன் படைவீரர் மாறுவேடம் பூண்டு கன்னேசியிற் புகுந்திருந்தனர். பிரபாகரச் சக்கரவர்த்தி இறந்ததும் இதுவே தக்க சமயம் என்று கிரகவர்மரை எதிர்க்கத் துணிந்தனர். தங்களுடைய சதியாலோசனையால் மாளவ தேசத்தார் கன்னேசியை எளிதில் கைப்பற்றிக் கொண்டனர்."

"தேவகுப்தன் அரண்மனையுள் தன் வீரரோடு புகுந்தான். அங்குள்ளோர் பலரையும் இரக்கமின்றிக் கொன்றான். அப்பொழுது கொலையுண்டவர்தாம் கிரகவர்மரும். அந்தப்புரத்திலுள்ள பெண்களையெல்லாம் அடிமைகளாகச் சிறைப்பற்றிக் கொண்டான். உங்கள் அருமைத் தங்கையாரான ராஜ்யஸ்ரீ தேவியையும் சிறை செய்தான்".

"அந்தக் கொடியவன், அந்த அம்மையாருடைய ஆடையாபரணாதிகளை எல்லாம் கழற்றிக்கொண்டான். கந்தலாடையை உடுக்கச் செய்து கையிலும் காலிலும் விலங்குகளுமிட்டான். மிகவும் துர்க்கந்தத்தோடு கூடின பாழான கட்டிடத்தையுடைய சிறையில் இட்டிருக்கிறான். நெற்றியில் திலகம் அணியக்கூடாதென்று ஆக்ஞையிட்டிருக்கிறான். வெள்ளாடையன்றிப் பிறிதாடை ஈதலும் தடுக்கின்றான். உண்டியும் கூழே உதவுகின்றான். நாங்கள் நல்ல உணவு அவ்வம்மைக்குக் கொடுக்கலாமென்றாலோ எங்களைத் தண்டிக்கத் தலைப்படுகிறான், இப்படியாக அவன் செய்யும் கொடுமைகளுக்கு ஆளாகித் தவிக்கிறார்கள். இக்கொடுமைகளை நீக்கியருள வேண்டும்" எனத் தெரிவித்தான்.

அவன் சொல்வன கேட்ட ராஜ்யவர்த்தனனுக்கு உண்டான கோபத்துக்கு அளவேயில்லை. "எனக்கு இவற்றை முன்னரே தெரிவித்தாய்; மிகவும் நல்லது" எனச் சொல்லிவிட்டு, தன்னுடைய சேனுபதியாகிய பந்தியை நோக்கினன்.

பந்தி, ராஜ்யவர்த்தனனுக்கு நெருங்கிய உறவினன். அந்தரங்க நண்பன். ஆண்மையன். மஹா விவேகி. அஞ்சாத நெஞ்சினன். சத்தியசந்தன். ராஜபக்தி யுடையவன். ராஜ்யவர்த்தனன் குறிப்பறிந்து அவன் முன் வந்து அடிபணிந்து நின்றுன்.

"பந்தி! குதிரைப் படைவீரர் பதினுயிரவரை உடன் கொண்டு என்னேடு புறப்படு; மாளவதேசத்தவர்க்கு ராஜ்ய வர்த்தனன் ஆற்றல் இவ்வளவு என்று அறிவுறுத்த வேண்டும்" என்று ராஜ்யவர்த்தனன் பணித்தான். தானும் கவசம் பூண்டு ஆயுதந்தாங்கி யுத்த சந்நத்தனுனன். பந்தியோ தன் படை வீரரைத் திரட்டி அணி வகுத்துக் கொண்டு புறப்பட ஆயத்தமானுன்.

ராஜ்யவர்த்தனன், தன் தம்பியைப் பார்த்து, "ஹர்ஷா! நான் சென்று தேவகுப்தனையும் அவனைச் சேர்ந்தாரையும் அழித்து மீள்கின்றேன். பழிக்குப் பழி வாங்கினலன்றி என் மனம் அமைதியுருது. என் வஞ்சினம் முடித்து மீண்டு என் கைகளால் நானே உனக்கு முடி சூட்டிவிட்டுத் துறவிற் புகுவேன்" என்று சொல்லிப் போர்மேற் செல்வானுனன். ஹர்ஷனே தன் தமையனுடைய வீராவேசத்தைக் கண்டு பிரமித்து ஒன்றும் எதிர்பேச மாட்டாதிருந்தான்.

ராஜ்யவர்த்தனன், இடியெனப் போர்முரசும் முழங்கச் சென்று மாளவத்தைத் தாக்கினுன். தேவகுப்தனுக்கு ராஜ்யவர்த்தனன் போருக்குத் தன்மேல் வந்து விட்டமை

தெரிந்தது. மனத்திலே அச்சங்கொண்டான். என்றாலும் தனக்குள்ள மதிலரண்வலிமையை எண்ணிச் சற்றுத் தைரியம் இழவாமல் இருந்தான். கோட்டை மதில்வாயில்களெல்லாம் அடைத்து, அகழியில் நீர் பெருக்கித் தக்க காவலுடையனாய் அரண்மனையுள்ளாக இருந்தான். அவ்வளவுமன்றித் தன் நண்பனான கௌட தேசத்தரசனுக்குத் தூதனுப்பிப் படை யுதவுமாறு வேண்டிக்கொண்டான். தன் படைகளை ராஜ்யவர்த்தனன் படையை எதிர்த்து நிற்குமாறு ஏவினான்.

கௌட தேசத்தரசனும், இந்தத் தேவகுப்தனைப் போலப் பிரபாகரனை அஞ்சியிருந்தவன்; பிரபாகரன் இறந்தமையாலே தேவகுப்தனோடு சேர்ந்து ராஜ்யவர்த்தனனை எதிர்த்து அடக்கிவிட்டால், தான் பேரரசன் ஆகிவிடலாம் என்ற ஆசையன்; ஆதலால் தேவகுப்தனுக்குப் பெரும்படை அனுப்பி யுதவினான்.

மாளவனுடைய படையும் கௌடனுடைய படையும் ஒன்று கூடி, ராஜ்யவர்த்தனன் படையை எதிர்த்து நின்றன; என்றாலும் ராஜ்யவர்த்தனன் படைமுன் அவை நின்று ஆற்ற முடியவில்லை. சிங்கம் ஒன்றேயானாலும் யானைத்திறள் அஞ்சுமன்றோ?

ராஜ்யவர்த்தனன் மாளவத்தாரை அடக்கி மேற்சென்று மதிலை யடைந்தான். ஆங்குள்ளாரை அழித்தான். தன்னுடைய ஆற்றலால் மதிலை அகப்படுத்தி அகழைக் கடந்து படையோடும் அரண்மனையுட் புகுந்தான். அங்குக் கையிற் பட்டவரெல்லாரையும் கொன்றொழித்தான். தேவகுப்தன் அஞ்சியோடும் வழியைப் பார்த்தான். அவனை ராஜ்யவர்த்தனன் தப்பவிடவில்லை. கைப்பற்றிக் கொண்டான். தேவகுப்தனுடைய கையிலும் காலிலும் விலங்குகளிட்டு அவனை அவனது தலைநகர வீதிகளில் இழுத்துச் சென்றான். பலவித அவமானங்களும் செய்

தான். பின்பு கொன்ருன். ராஜ்யவர்த்தனன் இவை செய்தும் அவ்வளவிலே தன் கோபமாறப் பெற்ருனில்லை. தன் தங்கை பொருட்டால் தேவகுப்தனைப் பழி வாங்கச் சென்றவன் யுத்த வெற்றியிலே அவனை மறந்துவிட்டான்.

தேவகுப்தனுக்குப் படையுதவிய கௌட தேசத்தரசன்மேல் அவன் மனம் சென்றது. 'நம்மை அடக்கி உயர்வடையலாம் என்றல்லவோ அந்தக் கௌடன் எண்ணிவிட்டான்' என்ற நினைவு பிறக்கவே தாமதமின்றித் தன் படையைக் கௌடம் நோக்கிச் செலுத்தினன்.

கௌடனுக்கு ராஜ்யவர்த்தனன் தன்மேல் படையெடுத்து வ்ருவது தெரிய வந்தது. அவன் நல்ல முன் யோசனை யுடையவன். ஆதலால் அவ்வப்போது நடப்பனவற்றை ஒற்றறைக்கொண்டு அறிந்து வந்தான். தேவகுப்தனது கதியை நினைத்தான். அவன் மனம் நடுங்கிவிட்டது. 'எப்படியாவது ராஜ்யவர்த்தனனை நண்பனுக்கி வஞ்சித்தே கொல்லவேண்டும்' என்று தீர்மானித்தான். உடனே தூதுவனிடம் ஓர் ஓலையை வ்ரைந்தனுப்பினன். அத்தூதுவன் கௌடனுடைய காணிக்கைகளைக் கொண்டு ஓலையையும் தாங்கி ராஜ்யவர்த்தனன் தங்கியிருக்கும் பாசறையெய்தினன். ராஜ்யவர்த்தனன் கௌடத்தின் எல்லையுள் இன்னும் சென்றடையவில்லை.

தூதுவன் கொணர்ந்த கௌடனுடைய காணிக்கைகளை ஏற்றுக்கொண்டு, அவனுடைய ஓலையை வாங்கிப் பார்த்தான்.

அந்த ஓலையில் "மஹாராஜாதிராஜராகிய ராஜ்யவர்த்தன தேவருடைய திருவடிகளே சரணம். கௌட தேசது அரசனுன நான் தெரிவித்துக்கொள்வது: தேவகுப்தன் ஹூணர்கள் ஹிம்சை பொறுக்க முடியவில்லை; படை யுதவவேண்டும்' என்று கேட்டுக்கொண்டான்.

அதனால் படை யுதவினேன். அவன் உங்களை விரோதித்து எதிர்க்கவே படையுதவி வேண்டினான் என்பதை யானறிய மாட்டேன். இது சத்தியம். அவ்வாறு அவன் கேட்டிருந்தால் நான் அதற்கு இணங்கவே மாட்டேன். அன்றியும் நானே அவனை அடக்க எதிர்த்திருப்பேன். அந்த மாளவன் என்னை வஞ்சித்து உங்கள் பகைவன்போல என்னை உலகிற்குக் காட்டிவிட்டான். அவனை நம்பி நான் ஏமாற்றமுற்றேன். ஸ்ரீராஜ்யவர்த்தன தேவராகிய உம்மை என் தலைவராக நான் அங்கீகரித்து அடிபணிகிறேன். அந்தப் படுபாவி மாளவனை நீர் கொன்று வென்றதை மிகவும் நான் பாராட்டுகின்றேன். உம்முடைய போராற்றலை நன்குமதித்து நான் ஒரு விருந்து செய்ய விரும்புகிறேன். அவ்விருந்துக்கு நீங்கள் பிரசன்னராயிருந்து என்னைக் கௌரவிக்க வேண்டுகிறேன். உம்முடைய புகழ் நீடூழி வாழ்வதாக."

இப்படிக்கு,

உங்கள் உண்மையுள்ள அடிமை,

நரேந்திரகுப்தன்

என்று எழுதியிருந்தது. அதைப் பந்தி கையிலே ராஜ்யவர்த்தனன் கொடுத்து, "பார்த்தனையா? 'கொட்டினால் தேள், கொட்டாவிட்டால் பிள்ளைப் பூச்சி' என்னும் பழமொழி மெய்யாகிறது. போகட்டும்; நரேந்திரகுப்தன் உண்மையே கூறியுள்ளான் என்று நினைக்கிறேன். நாம் அவனுடைய விருந்துக்குச் செல்வோம்" என்று கூறினான்.

பந்தி தன் கையிலே வாங்கிய கடிதத்தைப் பார்த்தான். அந்த வாசகங்கள் அவன் மனதில் ஐயத்தை விளைத்தன. ராஜ்யவர்த்தனனைப் பார்த்து, "மன்னா! நாம் மகிழ்ச்சியால் மதியை இழக்கலாகாது. ஹூணர்களை எதிர்க்க எவ்வளவு படையை அவன் அனுப்பியிருக்க வேண்டும். சிறு படையே போதுமன்றோ? அன்றியும் மாளவனும்

நல்ல படைப்பெருக்குடையவனே. அவன் இந்த நரேந்திரகுப்தனை ஹூணரை யடக்கப் படை கேட்டிரான். நம்முடைய பெரும்படையை எதிர்க்கவேதான் அவன் இவனை உதவி கேட்டிருக்கிறான். இவன் 'ஒரு கால் நாம் வென்றுவிட்டால் பேரரசாய்விடலாமே' என்ற ஆசையால் படை யுதவியிருக்கிறான். ஆனால் தெய்வ சங்கற்பம் வேறு விதமாய் முடிந்து விட்டது. தேவகுப்தனே இறந்து போனான். அதனாலே இவன் துணிந்து அவன் மேல் பழி சுமத்துகின்றான். தேவகுப்தனுகிலும் நாம் அஞ்சத்தக்கனில்லை. தன் பகையை அவன் நேரே காட்டியதனாலே; மற்று இவனே மிகவும் அஞ்சுதற்கு உரியவன். நயவஞ்சக முடையனாகக் காண்கின்றான். விருந்தென்று சொல்லி விஷமிட்டு உம்மைக் கொன்றாலும் கொல்வான். இவன் பசப்பு வார்த்தைகளை நம்பி நாம் சென்று தீங்கடைந்தால், உலகம், நம்மை அறிவிலாப் பேதைகள் என்றிகழும். ஆதலால் விருந்துக்குச் செல்வது அவ்வளவு உசிதமாக என் புத்தியில் தோன்றவில்லை'' என்றான்.

பந்தி சொல்லிய நல்ல மொழிகள் ராஜ்யவர்த்தனன் செவியில் ஏறவேயில்லை. "நம்முடைய வெற்றியைப் பாராட்டிய கௌடனிடம் பொறாமை கொண்டு இவன் இவ்வாறு சொல்லுகிறான்'' எனத் தவறான எண்ணங் கொண்டான். 'கேடு வரும் பின்னே மதிகெட்டு வரும் முன்னே' என்பது அநுபவ வாக்கன்றோ? அதனால் பந்தியை நோக்கி, 'ஓர் 'உத்தம க்ஷத்திரியன் நான்; கௌடனும் அக் குலத்தவனே. ஒரு க்ஷத்திரியன் ஒருநாளும் ஈனத்தொழில் புரிய நேரான். ஆதலாலே நரேந்திர குப்தன் என்னை விஷமிட்டுக் கொல்வான் என்று நீ சந்தேகிப்பது சிறிதும் தகாது. நான் அவனுடைய வேண்டுகோளின் படியே விருந்துக்குச் சென்றே தீருவேன். நீயோ ஐயமுற்றாய்! அதனால் உன்னையும் உன் படை வீரரையும் அங்கே நான் கொண்டுபோக மாட்டேன். நான் ஒருவனே செல்வேன். அவன் அளிக்

கும் விருந்துண்டு மீள்வேன். அதன் பின்னர் அவன் மேன்மையான குணமும் எனக்கு அவன்பாலுண்டான நம்பிக்கையும் நீ அறியநேரும். அதனால் என்னை இடை நின்று தடுக்காதே. ஈண்டு நீ இனித்திருப்பாயாக. 'நானும் வருவேன்' என்று சொல்லாதே. அப்படியே ஏதாகிலும் அவன் மோசஞ் செய்குவானெனில் என்னைக் காத்துக் கொள்ள நான் வகையறியாதவனில்லை. அவன் கையாலே நான் கொலையுண்டிறக்க வேண்டும் என்பது தெய்வசம்மத மானால் நீ என்ன? பிறர் என்ன? யாராகிலும் தடுக்க முடியுமோ? ஆதலால் நான் சென்று வருகிறேன்," என்று தூதுவன் வழிகாட்டி முன்செல்லத் தான் குதிரையேறிப் புறப்பட்டான். பந்திமேலொன்றும் சொல்லவில்லை. ஹர்ஷ னுக்குமட்டும் பிறர் அறியாமல் தன்னுடைய அந்தரங்க வேலையாளை அனுப்பினன். 'ராஜ்யவர்த்தனர் உடனே வரச்சொன்னர்' என்று தெரிவிக்கச் சொல்லி விட்டான்.

பந்தி அனுப்பிய வீரன் அதி விரைவிலே தனேசுவரத் தை யடைந்தான். ஹர்ஷனிடம் சென்முன். "மகாராஜா! உங்கள் தமையனர் உங்களைக் கையோடு அழைத்துவரச் சொன்னர்" என்முன். ஹர்ஷனுக்கோ தன் தமையன் சொல்வேதவாக்கே. உடனே புறப்பட்டான். பந்திபடைக ளோடு பாளைய மிட்டிருக்கும் இடத்தைச் சென்றுற்முன்.

பந்தி, ஹர்ஷன், வருதலைக் கண்டு எதிர்கொண்டு அழைத்து உபசரித்தான், ஹர்ஷன், அவனை நோக்கி, "என் தமையனரை நான் உடனே காணவேண்டும். அவர் எங்குள்ளார்? சொல்" என்று கேட்டான். அதற்கு மறு மொழியாகப் பந்தி, "நீர் அவரைக் காணவே முடியாது" என்முன்.

ஹர்ஷன் :—காணவே முடியாதா! ஏன்?

பந்தி :—ஆம். அவர் இங்கில்லை.

ஹர்ஷன் :—எங்கிருக்கிறுர் ?

பந்தீ :—கௌட னுடைய அரண்மனையிலிருக்கிறுர்.

ஹர்ஷன் ;—அங்கு அவர் ஏன் சென்றுர் ?

பந்தீ :—அவன் அளிக்கும் விருந்துண்டு களிக்கச் சென்றுர்.

ஹர்ஷன் :—விருந்தா ! விருந்து எதற்காக ?

பந்தீ :—விஷமுண்டு சாவதற்காக.

ஹர்ஷன் :—ஆ ! விஷமா ! அதை உண்ணவா ? அதன் உண்மை என்ன ?

பந்தீ :—ஒன்றுமில்லை. நான் உண்மையைச் சொல்லி விடுகிறேன். சற்று அமைதியாய்க் கேளும். நான்தான் உமக்கு அவரனுப்பியதுபோல ஆளனுப்பினேன். கௌடன் மகா நயவஞ்சகன். நம்மை எதிர்க்க மாளவனுக்குப் படை உதவினுன். மாளவனே இறந்தான். அவன் படையோ முறியடிக்கப்பட்டது. கௌடப் படையோ சின்னபின்னமாய் முதுகு காட்டி யோடியது. மாளவ தேசமோ கல்லோலப்பட்டுத் தவிக்கிறது. ராஜ்யவர்த்தனர் வென்றுர். வென்றவர் மாளவனுக்குப் படையுதவிய கௌடனைத்தாக்கத் தலைப்பட்டார். அவன் எப்படியோ அவர் கருத்தை முன்னடியே தெரிந்து கொண்டுவிட்டான். நம் படைகள் கௌடம் அடையுமுன் தூதுவர் வசம் அவன் காணிக்கைகளை யனுப்பி வைத்தான். ராஜ்ய வர்த்தனர் மாளவனைக் கொன்று வென்றதைப் பாராட்டுவதாகத் தெரிவித்தான். அவரை எத்தனை விதத்தில் மயக்கலாமோ அத்தனை விதத்தில் மயக்கக்கூடிய வாசகங்களையுடைய ஓலையை அனுப்பியிருந்தான். அவனேலையைக் கண்டு ராஜ்யவர்த்தனருக்கு உச்சி குளிர்ந்துவிட்டது. மூளையைப் பறிகொடுத்து விட்

டார். 'விருந்துக்குச் செல்வோம்' என்றார். நான் இடை தடுத்தேன். என்னை இகழ்ந்து சீறி விழுந்தார். தாம் ஒருவரே சென்றார். அவன் நயவஞ்சகன் என்ற அச்சமே என் உள்ளத்தில் குடிகொண்டிருக்கிறது. உம்மை அருகிலே கொண்டிருப்பது நலமெனப்பட்டது. ஆதலால் ஆளனுப்பி உம்மை ஈண்டுவரச் செய்தேன். இதோ பாரும் அந்தக் கௌடனுடைய ஓலையை. அவனைத் தாக்க நேரினும் நேரும் என்ற எண்ணம் உண்டாகவே நம் படைகளைக் கௌட தேசத்தின் எல்லைப்புறமே மெல்லக்கொண்டு வந்து விட்டேன்!"

இவ்வாறு பலவும் சொல்லிக் கௌடன் அனுப்பிய ஓலையை ஹர்ஷனிடம் பந்தி கொடுத்தான். ஹர்ஷன், அந்த ஓலையைப் படித்துப் பார்த்தான். அவனுக்கு கௌடன் கருத்து ஏதோ ஒருவகையாய் விளங்கியது போலத் தோன்றியது. உடனே பந்தியின் முகத்தை ஏறெடுத்துப் பார்த்தான்.

"அங்கு ஏதாவது நிங்கு நடந்தால் உடனே நமக்கு அது தெரிந்துவிடும். ஒற்றர்களை நம்மவரே யறியாவண்ணம் அனுப்பி வைத்திருக்கிறேன்" என்றான் பந்தி.

அவ்வளவிலே ஓடோடியும் குதிரைமேல் ஏறி வந்தவன் ஒருவன் பந்தி முன் சென்று பணிந்தான். பந்தியினருகே ஹர்ஷனைக் கண்டதும் அவனை நெடிது வீழ்ந்தடி வணங்கினான். எழுந்து வாய் புதைத்து நின்று, "ராஜ்யவர்த்தனர் விருந்துண்டவர் இரவிலே குத்தப்பட்டார்" என்றான். "ஆ!" என்றனர் ஹர்ஷனும் பந்தியும்; மூர்ச்சையுற்றனர்; அருகிலுள்ளார் செய்த உபசரணையால் ஒருவாறு தேறினர்; எழுந்தார்.

ஹர்ஷன் வந்தவனை, "என் தமையனை எவ்வித வஞ்சனையால் அவன் கொன்றான், சொல்" என்றான்.

வந்தவன்:—"மகாராஜா! ராஜ்யவர்த்தனர் இங்கிருந்து சென்றதும் அவரைக் கௌடன் எதிர்கொண்டழைத்தான். அவன் மிகவும் மரியாதைகள் செய்து அடிபணிந்து வரவேற்ற மாதிரியே ராஜ்யவர்த்தனர் மனதை மயக்கி விட்டது. பின்பு அவனுடன் அரண்மனையுட் புகுந்தார். அங்கு ஆடல், பாடல் முதலிய ஆர்ப்பாட்டங்கள் பல. உலக வாழ்க்கையை விரும்பாதவர் உங்கள் தமையனர்; அவருங்கூடக் கௌடனுடைய ஆடம்பரமான விருந்திலே மதிமயங்கி விட்டார். ஆனாலும் ராஜ்யவர்த்தனர் தாம் உட்கொண்ட ஒவ்வொரு பதார்த்தத்தையும் அந்தக் கௌடனுடைய நாய்க்கே முதலில் கொடுத்தார். பின்பே தாமுண்டார். அவர் அப்படிச் செய்வார் என்று அந்தக் கௌடன் எண்ணியிருந்தான் போலும். அதனாலே உணவிலே விஷம் கலந்து வைக்கவில்லை. விஷமிடப் ப்படவில்லை என்று அறிந்து, ராஜ்யவர்த்தனர் அடைந்த சந்தோஷத்துக்கு அளவேயில்லை. அன்றிரவிலே நெடுநேரம் விருந்துண்டு, ஆடல் பாடல்களிலே ஈடுபட்டார் ராஜ்யவர்த்தனர். பின்னர் பொழுது அதிகமானதையறிந்து துயில் கொள்ள சயன அறை புக்கார். நானோ விருந்துக்கு உணவாதிகளை எடுத்துதவும் வேலையாட்களின் தலைவனைச் சந்தித்து மிகுந்த பொருளைக் கொடுத்தேன். 'அவ்விருந்துண்ணும் ஆசையுடையேன்' எனத் தெரிவித்தேன். அவன் தன் பரிசனங்களில் ஒருவனுக என்னையும் கொண்டான்; நான் விருந்துக்கு வந்திருந்த உணவுப் பொருள் ஒவ்வொன்றையும் தின்று பார்த்துக்கொண்டேன். அவற்றில் விஷமில்லை. அவையே ராஜ்யவர்த்தனருக்குக் கொடுக்கப்பட்டவாறும் என் கண்ணாரக் கண்டேன். மனவமைதியுற்றேன். இப்படி மகிழ்ந்த என் மனம் புண்ணுக, அந்தக் கௌடன் மென் மலர் அமளிமேல் தம்மை மறந்து அயர்ந்து உறங்கும் ராஜ்ய வர்த்தனரைத் தன் கை உடைவாளால் குத்தி விட்டான். அவர்

குற்றுயிராய் மரணாவஸ்தையிலிருக்கிறார். இனிப் பிழைப்ப தரிது. ஆனால் நான் ஒருவரும் காணாவகை சயன அறை புக்கேன். அங்கு ராஜ்யவர்த்தனர் இரத்த வெள்ளத்தில் புரண்டு கொண்டிருப்பதைப் பார்த்தேன்; அருகிற் சென்றேன். என்னைத் தெரிவித்தேன். 'என்ன செய்யவேண்டும்' என்றேன். அதற்கு அவர் மறுமொழியாய், "என் தம்பி ஹர்ஷனை இந்த வஞ்சகஞ் செய்தவனிடம் பழிக்குப் பழி வாங்கச் சொல்லு" என்று மட்டும் சொன்னார். பின்பு அவரால் பேச முடியவில்லை. என்னைப் போகுமாறு கையாற் செய்கை செய்தார். நானும் உடனே புறப்பட்டு வந்தேன்" என்றார்.

ஹர்ஷன் மனநிலையை என்னென்று கூறுவது? உன்மத்தன்போல அப்படியே அசைவற்றுச் சிறிது நேரமிருந்தான். தன் தமையனுடைய நல்ல குணங்களையும் வீரச் செயல்களையும் அஞ்சாநெஞ்சத் திடத்தையும் எண்ணி எண்ணி அழுதான். அப்படி அழுது கொண்டிருப்பவனுக்கு மெல்லமெல்ல அழுகை கோபமாக மாறியது. உலையிற்படுதீ என மூச்சுவிட்டான். கண்ணிற் பொறி பறக்கத் தொடங்கியது. மெய்யிற் பொடி வேர்வை பொடித்து விட்டது. வாளை உருவினான். அருகிலே நின்ற குதிரைமேல் ஏறினான். "ஏ பந்தி! எழுக நம்படைகள். இந்தக் கௌடன் ஊரை அநுமான் இலங்கையைச் சுட்டது போலச் சுட்டுக் கொளுத்துவோம். இந்த நரேந்திரகுப்தன் உடலை வெட்டித் துண்டங்களாக்கி நாய் நரிகள் பேய் கழுகுகள் கொத்தித்தின்ன நல்விருந்திடுவோம்" என்றான்.

பந்தி அவ்வாறு செய்யத் தானே ஹர்ஷனை அங்கு வரவழைத்தான்! படையை நடத்திச் சென்று கௌடத்துள் புகுந்தான். நரேந்திரகுப்தன் இவ்வளவு விரைவில் தன்னை ஹர்ஷனும் பந்தியும் தாக்குவார்கள் என்று எதிர் பார்க்கவில்லை. பந்தி அஞ்சியோடி விடுவான் என்று

எண்ணியிருந்தான். கதுமெனப் படைகள் தாக்கவே கௌடத்தார்க்கு திக்கு முக்காடி விட்டது. ஊரிலே எங்கும் தீயிட்டுக் கொளுத்தி ஆடவரெனக் கண்ணிற் பட்டாரை யெல்லாம் ஹர்ஷனுடைய வீரர் கொல்லலாயினர். எங்குப் பார்த்தாலும் கௌடத்திலே 'ஐயயோ முறையோ' என்ற அழுகை ஒலிதான் கேட்டது.

ஹர்ஷன்நேரே நரேந்திரகுப்தன் மாளிகையுட்புகுந்து அவனைச் சிறைப்பற்றினன். நடுவீதியிலே கொணர்ந்தான். நயவஞ்சகமாய்த் தன் தமையனைக் கொன்றவன் கைகளை முதலில் வீசித் துண்டங்களாக்கினன். பொய்யாக இனிய மொழி பகர்ந்த நாவை யறுத்தான். இப்படியாக அவனைச் சித்திரவதை செய்தான். பின்பு தன் கோபமு மாறினன்.

யுத்தவெறி தணிந்ததும் அவனுக்குத் தன் தங்கை ஞாபகம் வந்தது. பந்தியை நோக்கி, "பந்தி! என் தங்கை ராஜ்யஸ்ரீயைப்பற்றிய செய்தியொன்றும் தெரிந்திலதே. அவள் என்ன நிலையடைந்தாளோ?" என்ருன். பந்திக்கும் அப்பொழுதுதான் ராஜ்யஸ்ரீயின் ஞாபகம் வந்தது. அவன் தூங்கி விழித்தவன்போல மிரள மிரள விழித்தான். ஹர்ஷனை நோக்கி, "அந்த மாளவன் அவளைக் கன்னேசியிலேயே சிறைவைத்துப் போந்தான் எனக் கேட்டோம். இங்குப் போரிலே மூண்டு விட்டோம். அதனல் அவள் ஞாபகமே இல்லாமற் போயிற்று. நாம் விரைந்து கன்னேசிக்கே செல்லவேண்டும்" என்று பந்தி கூறினன். ஹர்ஷனும் அப்படியே புறப்பட்டான். கன்னேசியை அடைந்தனர்.

கன்னேசியை அடைந்து ஹர்ஷனும் பந்தியும், ஆண்டுள்ள மாளவனுடைய காவல் வீரரைக் கொன்றழித்தனர். சிறையிலே ராஜ்யஸ்ரீயைக் தேடினர். அவளைக்

காணவில்லை; திடுக்கிட்டனர். அப்பொழுது அவர்கள் மனம் பட்ட பாட்டை யார்தான் சொல்ல வல்லார்?

அவர்கள் கண் கலங்கிச் சேர்ந்து நிற்கையில், ஆங்கு ஒரு பௌத்த முனிவர் வந்து சேர்ந்தார். அவர் ஹர்ஷனைக் கண்டு ஆசிர்வதித்து, "இளவரசே! உமது தங்கையான ராஜ்யஸ்ரீ விந்திய மலையிலுள்ள காட்டிலே கிராதகர் வசிக்கும் குறிச்சியை யடுத்த மலைக்குகையிலே நேற்று இரவு தங்கியிருந்தாள். அவளுடைய பொன்மயமான உடம்பெல்லாம் புண் மயமாய் விளங்குகிறது. அம்புகள் தைத்துத் தவிக்கும் பெண் மான் போல அவள் அல்லற் படுகின்றாள். அவளை நாங்கள் ஒருவாறு தேற்றினதாலே அவள் இன்னும் உயிர்கொண்டிருக்கிறாள். நீர் விரைந்து சென்றால் ஆண்டு அவளைக் காணலாம். தாமதித்தால் ஒருகால் அவள் உயிர்விடுவதும் கூடும்" என்று சொல்லி அவள் தங்கியுள்ள இடத்துக்கு வழியும் தெரிவித்துச் சென்றார்.

ஹர்ஷன் உடனே புறப்பட்டான். முனிவர் கூறிய மலைக்குகையை அடைந்தான். அங்கு ராஜ்யஸ்ரீயைக் காணவில்லை. என் செய்வான்! அவள் தன் உயிரை மாய்த்துக்கொண்டாளோ என்ற ஐயம் அவனுக்கு உண்டாயிற்று. துக்கமோ நெஞ்சைப் பிளக்கின்றது. வாய் திறந்து புலம்பவும் முடியவில்லை. அப்படியே வெறிகொண்டாற்போல அங்கும் இங்கும் ஓடினான். கொடி, செடி, மரங்களைக் கட்டிக்கொண்டு அழத்தொடங்கி விட்டான், காட்டினுள் அலையத் தலைப்பட்டான். அச் சமயம் அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. தங்கையின் ஞாபகமே.

அப்படியாகத் திரியும் ஹர்ஷனுடைய கண்களுக்கு எதிரே சிறிது தூரத்தில் நெருப்பு ஓங்கி வளர்வது தோன்றியது. அதைக் கண்டதும், "ஒருகால் நம் தங்கைதான் தீ வளர்க்கிறாளோ? தீப் பாய எண்ணித் துணிந்து விட்

டாளோ ?" என்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. அவ்வளவுதான். ஒரே மூச்சிலே அவ்விடத்தைச் சென்றடைந்தான்.

அடைந்தவன் அங்கே தீப் பாய்ந்திறப்பதற்கு மெல்ல அடிவைத்து வலம் வரும் தன் தங்கையைக் கண்டான். "ஆ! என் அருமைத் தங்காய்!" என்று அலறி ஓடிச் சென்று அவள் கைகளைப் பற்றிக்கொண்டான். ஆனந்தக் கண்ணீர் சிந்தினன்.

ஹர்ஷனைக் கண்டதும் ராஜ்யஸ்ரீ தன்னையும் மறந்தாள். அப்படியே தமையன் மார்பின்மேற் சாய்ந்து மூர்ச்சையுற்ருள். அவளை ஹர்ஷன் மெல்லத் தாங்கித் தரையில் வைத்துத் தன் ஆடைகொண்டு வீசி இளைப்பாற்றினன். அவள் ஒருவாறு தேறி யெழுந்து, 'அண்ணு! என்னையும் மறவாது தேடி வந்தீரே" என்ருள். அவளுடைய சொற்கள் ஹர்ஷனுடைய நெஞ்சிலே ஊடுருவிச் செல்லும் வாள்போலத் தைத்தன.

"தங்காய்! உன்னை மறந்தும் உயிர்வாழ வேண்டுமா? உத்தமியே! உனக்கும் உன் நாயகற்கும் தீங்கிழைத்த காதகரைக் கொன்றழிக்க நேர்ந்ததால் இத்தனைநாள் உன்னைக் காணச் சமயம் வாய்த்திலது. அந்தக் காதகராகிய மாளவனையும் கௌடனையும் கொன்று அவர்கள் நாட்டையும் தீக்கிரையாக்கிப் பழிவாங்கினேம். பின் உன்னைத் தேடிவந்த காலத்தே நீ அங்கில்லை. பௌத்த முனிவர் சகாயத்தால் நீ இக் காட்டிலே புக்கிருப்பதை அறிந்து ஓடோடியும் வந்தேன். காணமுடியவில்லை. என்னைப் பார்! தங்காய்! எவ்வளவு மாறுத லடைந்திருக்கிறேன்". என்ருன் ஹர்ஷன்.

ராஜ்யஸ்ரீ :--அண்ணு ராஜ்யவர்த்தனர் எங்கே ?

ஹர்ஷன் :—தங்காய்! நீ சற்றே மனவமைதியுடையவளாகவேண்டும். அந்தக் காதகனுகிய கௌடன் அவரை

நய வஞ்சகமாய்க் கொன்றுவிட்டான். அந்தப் பாவியை நான் பழிவாங்கி வந்தேன். அதனாலேதான் உன்னைத் தேடுவதில் இவ்வளவு காலதாமதமாயிற்று.

இவ்வார்த்தைகளைக் கேட்ட ராஜ்யஸ்ரீ மீண்டும் துக்கம் பொறுக்க முடியாமல் மூர்ச்சையுற்றாள். அவளை ஒருவாறு தேற்றி அழைத்துக்கொண்டு ஹர்ஷன் நகரினுட் புகுந்தான்.

ஹர்ஷன் மகா பலிஷ்டனான கௌடனை அடக்கிவிட்டதறிந்த ஏனைய சிற்றரசர், பிரபாகரனிலும் ஹர்ஷனை அஞ்சினர். ஹர்ஷனும் தன் தமையனது விருப்பத்தை நிறைவேற்றிய பின் அரசாள விருப்பமில்லாதிருந்தான். இருந்தாலும் ராஜ்யஸ்ரீ முதலானவர்கள் வேண்டியதனால் ராஜ்யாபிஷேகம் செய்து கொண்டான். சக்கரவர்த்தியானான். ராஜ்யஸ்ரீ தான் பௌத்த பிக்ஷுணியாக விரும்பினாள். ஹர்ஷன் அங்ஙனம் அவளை அனுப்ப மனமில்லாது தன்னுடன் கொண்டிருந்து சகல காரியங்களையும் அவளைக் கொண்டு நடத்தி அரசு செலுத்தினான்.

---

## 2. தெல் என்னும் தேசாபிமானி

கடல் சூழ்ந்த இவ்வுலகிலே ஆசியா கண்டத்தை அடுத்திருப்பது ஐரோப்பா கண்டம். அதிலே பிரான்ஸ், ஜேர்மனி, இதாலி, ருஷியா முதலிய பல தேசங்கள் இருக்கின்றன. அவற்றுள், ஸுவிட்ஜர்லந்தும் ஒன்று. அது மற்றைய தேசங்களைப்போல் இல்லாமல், சூழ மலைகளைக் கொண்டிருக்கிறது. இயற்கை மலையரண் வாய்ந்த அத் தேசத்தை வெல்லுவது பிறர்க்கு அரிதாயிற்று. அதனாலே அத்தேசத்தவர் சுயேச்சையாகவே வாழ்ந்து வந்தனர். ஆயினும்

கால வேறுபாட்டால், அவர்களும் ஒரு காலத்தில் சுவாதீனம் இழந்து தவிக்கலாயினர். அவர்களை ஆஸ்திரியா தேசத்து அரசன் வென்று அடக்கினன்.

ஆஸ்திரியா தேசத்து அரசன், தன் ஆளுகையிற்பட்ட ஸ்விட்ஜர்லந்தைப் பல ஜில்லாக்களாகப் பிரித்தான். ஜில்லாதோறும் 'கவர்னர்' என்னும் தலைமையதிகாரியை நியமித்தான். ஸ்விட்ஜர்லந்தை நன்ருய் ஆளவேண்டும் என்பது அவன் நோக்கமில்லை. தான் வென்றவரை அடிமைகளாக்கி அல்லற்படுத்த ஆசை கொண்டான். ஆதலால் கல்லினும் வலிய மனத்தவரைக் கவனர்களாக்கினன். அவர்களும் அவன் மனம் களிக்குமாறு ஸ்விட்ஜர்லந்தாரை மிகவும் துன்புறுத்தி வந்தனர்.

அவர்களுள் ஒருவன் ஜெஸ்லர் என்பவன். இவன் கவர்னர்களில் முதன்மையானவன். 'கொடைக்குக் கர்ணனும் படைக்கு அர்ஜுனனும்' போல இவன் கொடுமைக்குப் பேர்போனவன். இவனுடைய ஆளுகைக்குட்பட்டது பர்க்லென் என்னும் ஜில்லா.

ஜெஸ்லர் பர்க்லென் வாசிகளைப் படுத்திய பாடு நாம் சொல்லுந் தரமன்று. தன் கருத்துக்கு இணங்காதவர் என்று யாரைச் சந்தேகித்தாலும் அவரை விசாரியாமலே கொன்று வந்தான். அந்த ஜில்லா வாசிகள் அவன் செய்யும் கொடுமைகளைப் பொறுக்க முடியாமல் தவித்தனர். மனங்கொதித்தனர். கொதித்தாலென்ன? குளிர்ந்தாலென்ன? அவர்களால் செய்யக்கூடியது ஒன்றும் இல்லை. ஜெஸ்லர் ஆட்சி முறையைப் பற்றி யாரேனும் பேசினலோ அவர்கள் கெதி அதோகெதிதான். அதனல் தண்டனைக்கஞ்சி, அவர்கள் தங்கள் மனக்கசப்பை வெளியிடாதிருந்தனர். "காவல் மன்னவர் காய்வன சிந்தியார்; நாவினும் உரையார்; நவை யஞ்சுவார்" என்பது பெரியோர் வாக்கு.

இவ்வாறு தாழ்மையுற்ற பர்க்கலெனில் மேன்மை பெற்ற வில்லாளி ஒருவன் இருந்தான். அவன் பெயர் வில்லியம் தெல். அவன் இன்பம் பயக்கும் சுந்தர முகத்தன். சிவந்து நீண்ட கண்ணினன். முழங்கால் அளவுந் தாழ்ந்த கையினன். மலைபோல் பரந்த மார்பினன். சிங்கம் போன்ற நடையினன். அவனைப் போலக் கம்பீரத் தோற்றமும் அழகும் உள்ளவர் அவ்வூரிலே பிறரில்லை. அவன் பர்க்கலென் ஜில்லாவில் பர்க்கலென் ஊரினன்.

அவன் மலைமேற்கொண்ட குடிசை வாழ்க்கையன்; எனினும் ஏழையில்லை. மலைவாசியாதலால் வேட்டையாடுதலைச் சீவியமாகக் கொண்டவன்; எனினும் கெடுமைகள் செய்யும் குணத்தவனில்லை. அவன் அந்த ஜில்லாவிலே மிகப் பெரிய ஊரி யென்னும் ஏரியிலே படகோட்டுதலும் உண்டு; அது அவன் சீவியமன்று; பொழுது போக்கான செயலாகும். கொந்தளிப்பு மிகவுடைய அந்த ஏரியிலே அவனைப் போலப் படகோட்டப் பிறரால் முடியாது. தன்னுடைய வில்லிலே அம்பு தொடுத்து எப்படிப்பட்ட லக்ஷியத்தையும் அடித்து விடுவான். வில்லாளரை யெண்ணினல் விரலுக்கு முன்னே நிற்கும் வீரன் அவனே. இவற்றாலே அவன் அந்தப் பர்க்கலென் ஜில்லாவிலே எல்லாராலும் நன்கு மதிக்கப்பட்டான்.

அவனுடைய குணத்துக்கு ஏற்ற குணவதியான மனைவியும் அவனுக்கு அமைந்திருந்தாள். அவனுக்குப் பிறந்த குழந்தைகளில் மூத்தது ஆண். அந்தப் பிள்ளையிடம் தெல் மிகவும் அன்புடையவன். தசரதனுக்கு இராமனிடம் எவ்வளவு வாஞ்சையோ அவ்வளவு வாஞ்சை தெல்லுக்குத் தன் மகனிடத்திலே இருந்தது. அவனுடைய குடும்பத்திலே சந்தோஷமும் சமாதானமுமே சிறந்து விளங்கின.

பர்க்கலென் ஜில்லாவில், ஆல்டர்ப்பு என்னும் ஓர் ஊருண்டு. அங்கு மாதந்தோறும் ஒரு பெரிய சந்தை கூடு

வது வழக்கம். தான் வேட்டையாடிய மான்முேல்களை, வில்லியம் தெல் விற்றுப் பொருளாக்குவது அந்தச் சந்தையிலேதான்.

ஒரு நாள், அவன் தன் மகனையும் அழைத்துக் கொண்டு, அங்குச் சென்முன். அவன் கையிலே பணம் அதிகமாய் இருந்தது. அவனுக்குத் தன்னை யறியாமலே குதூகலம் மிகுந்தது. மிக்க சந்தோஷமுள்ளவனுய்க் காணப்பட்டான். அவன் மாரிக்காலத்துக்கு வேண்டும் உடை முதலியன வாங்கவோ சந்தைக்கு வந்தவன். தன் மகனுடைய இனிய பேச்சுகளுக்கு இடையிடையே செவி சாய்த்த வண்ணமாய்ச் சந்தையுட் புகுந்தான்.

அவன் புகுதலைக் கண்டு, அங்கு உள்ளாரிற் சிலர், "அதோ வருகிருனே, அவன்தான் வில்லியம் தெல், பார்க்க லென் வாகி. பெயர்போன வில்லாளி. ஜெஸ்லருடைய கொடுமைக்கு இன்னும் ஆளாகாமல் இருப்பவன் இவன் ஒருவனே; என்ன கெம்பீரமாய் நடக்கிருன் பார்த்தீர் களா? ஜெஸ்லர் கையிலே இவன் சிக்கினுல் என்னுவனே?" என்று தமக்குள்ளே பேசிக்கொண்டனர்.

அப்பொழுது, அவர்கள் திடுக்கிடும்படி, ஜெஸ்ல ருடைய படைவீரர் சிலர், வில்லியம் தெல்லை யணுகினர். கதுமென அவனுடைய இரு தோளையும் பற்றி நிறுத் தினர். "இதோ பார்! 'இதை வணங்காதவர் சாவர்' என்று நீ அறிவாய் அல்லையோ?" என்று ஒரு கம்பத்தின் மேலே தொங்கும் தொப்பி யொன்றைச் சுட்டிக் காட்டி னர். அதைப் பார்த்தான் தெல்.

அது ஆஸ்திரியா தேசத் தரசன் முடிபோலத் தோற்றமுடையதாய் இருத்தலைக் கண்டான். "ஆஹா! ஆண்மை குன்றி அடிமைப்பட்டோம் என்றல்லவோ இந் தத் தொப்பியை வணங்கச் சொன்னுர்கள்? இப்படிச் செய்யும்படி உத்தரவிட்ட ஜெஸ்லருடைய கர்வம்தான்

என்ன ! இப்படுபாவிகள் மானத்தைக் கொஞ்சமேனும் மதிக்கவில்லையே'' என்று எண்ணினன். எண்ணவே அவன் மனதிலே கோபமும் தாபமும் பொங்கி யெழுந் தன. முகமோ சிவந்துவிட்டது! தொப்பியின் மேல்வைத்த கண்ணை வாங்காமற் பார்த்து அசைவற்று நின்றான்.

அவ்வளவுதான்; சந்தையிலே கூடிய ஜனங்கள் தங்கள் வியாபாரத்தையும் விட்டு, தெல் இருக்கும் இடத்தில் வந்து கூடிவிட்டார்கள். தெல்லுக்கோ, ''நம்முடைய ஆண்மையும் தேசத்தின் கௌரவமும் காக்கப்பட வேண்டும்'' என்ற எண்ணம் எழுந்தது.

அங்கே வந்து கூடினவர்கள் ஒருவரும் வாய் திறவா மல் கண் இமையாமல், சித்திரப் பதுமைகள் போல் நின் றனர். 'இதன் முடிவு என்னகும்?' என்பதே அவர்கள் மனத்தில் எழுந்த கேள்வி. அப்பொழுது ஓர் ஊசி வீழ்ந் தாலும் அறிந்து எடுக்கலாம். அவ்வளவு நிசப்தம்.

பொங்கி யெழுந்த கோபத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டான் தெல். காவலரை நோக்கினன். ''நான் அநீதமான செயல் ஒன்றும் செய்திலேன்; என்னைப் போக விடுங்கள்'' என்றான்.

காவலர், மீண்டும் தொப்பியைச் சுட்டிக் காட்டினர். ''நீ இதை வணங்காமையால், அரசனை அவமதித்த குற்ற முடையவனனாய். ஆதலால் உன்னை விடமாட்டோம்'' என்றனர்.

கேட்டான் தெல். அவனுக்குப் பின்னும் கோபமே உண்டாயிற்று. ஆயினும் அதை வெளிக்காட்டவில்லை. காவலர் நெஞ்சையே பிளந்து விடுவான்போல ஒரே பார் வையாகப் பார்த்தான். ''முடி சூடி அரசன் என் முன் வந்து நிற்கும்போது, நான் வணங்காவிட்டால் அது குற்ற மாகும். இது கேவலம் ஒரு தொப்பி. அரசனுடைய கிரீ

டமுமில்லை. 'இதை வணங்கு' என்று சொல்லவும் உங்கட்கு வெட்கமில்லையா? எனக்கேயல்ல: உங்களுக்கானுலும் ஒரு தொப்பி அரசனைக் காட்டிலும் மேலானதாகுமா?" என்று சொல்லுகையில், 'ஹோ!' என்றான் ஒருவன். அவன் யாரென்று காணச் சட்டென எல்லோரும் திரும்பினர். அங்குப் பர்க்கலென் ஜில்லாக் கவர்னரான ஜெஸ்லர் நிற்கக் கண்டனர்; திடுக்குற்றனர்.

ஜெஸ்லரைக் கண்டதும் காவல் வீரர் கைக்கூப்பித் தொழுது சற்றே ஒதுங்கி நின்றனர். கூட்டத்தவர்கள் அவனுக்கு வழி விலகினர். விலகவே மெல்ல வில்லியம் தெல் இருக்குமிடம் அவன் வந்தான். தெல்லை அணுகி, "அரசன் அணியும் மணி முடியின் அடையாளம் இது. உன்னுடைய விளையாட்டுப் பேச்சுக்கு இது விஷயமானது போலும்?" என்றான். அவனுடைய குரூரத் தோற்றத்தையும் கடுஞ் சொல்லையும் கண்டு தெல்லின் மகன் பயந்து விட்டான். " அப்பா! அப்பா!" என்றான்.

ஜெஸ்லர் பயந்துவிட்ட அச் சிறுவனைத் தன் கையாற் பற்றினன். தன் அருகே இழுத்து நிறுத்தினன். "இவன் தான் மகா தைரியசாலியான தெல்லின் மகனே?" என்றான்.

நெல் :—'அவனுக்கு ஒரு துன்பமும் செய்யாதீர். அவன் ஒரு குற்றமும் செய்யவில்லை. அவன் என்னுடைய அன்புக்குரிய சிமந்த புத்திரன்' என்றான்.

ஜெஸ்லர் :—ஓ! அப்படியா! உன் சிமந்த புத்திரனு இவன்? நீ இருக்க இவனை நான் வருத்துவேனே? காவல் வீரர்களே! இந்தச் சிறுவனை அதோ இருக்கும் தேக்க மரத்தோடு சேர்த்துக் கட்டுங்கள். இவன் தலையின்மேல் ஒரு கொய்யாப்பழத்தை வையுங்கள்" என்றான்.

தெல் :—'குற்றவாளி என்று என்னைக் கருதினுல் தண்டனைக் குரியவன் நான்; என் சிறுவன் நிரபராதி. அவனை

என் மரத்தோடு கட்டச் சொல்லுகிறீர்? ஈதென்ன நியாயம்? யான் செய்த குற்றத்துக்கு என் மகனே தண்டனை பெறுவது?' எனக் கோபத்துடன் வினவினன்.

ஜெஸ்லர்:—"உன் மகனைத் தண்டிப்பது என் கருத்தன்று. உன்னைத் தண்டிப்பதே என் நோக்கம். உன்னுடைய நல்ல காலம் எனக்குக் கோபம் உண்டாகவில்லை. அதனால் உன்னிடம் சிறிது கருணையும் காட்டுகின்றேன். இந்தப் பர்க்கலென் ஜில்லாவிலே சிறந்த வில்லாளி என்று நீ புகழப் படுகிருய். உன்னுடைய வில்லாண்மையைச் சோதிக்க விரும்புகின்றேன். அதோ பார்! அந்தமரத்தோடு உன் மகன் கட்டப்பட்டிருக்கிருன். அவன் தலைமேல் ஒரு பழம் இருக்கிறது. அதை ஒரே பாணத்தால், இரண்டு துண்டாகச்செய். குறிதவறினாலும், உன்மகனைக் காயப் படுத்தினாலும் நீ உயிரிழப்பது திண்ணம். உன் வில் வல்லமையால் உன்னுயிரையும், மகனையும் காத்துக் கொள்" என்ருன்.

காய்ச்சி யூற்றிய நாராசம்போல இவ்வார்த்தைகள் தெல்லின் செவியிலே புகுந்தன. அவனை யறியமேலே அவனுடல் நடுங்கத் தலைபட்டது. பாம்புபோலக் கொடியவன் ஜெஸ்லர். அவன் சொல் அந்தப் பாம்பின் விஷம் போலத் தெல்லை வருத்தியது. மிகவும் துன்புற்ருன். "உன்னைப் பெற்றேன் அருமை யறிவேன்; பிழையேன், பிழையேன்" என்ற தசரதனைப் போலக் கலங்கினான். தன் அருமை மகனைக் கல்மனத்தவர் மரத்தோடு கட்டக்கண்ட துன்பம் ஒன்று; அவன் தலையின்மேல் வைத்திருக்கும் பழத்தைக் குறிவைத்து அடிக்கவேண்டிய துன்பம் மற்ருென்று. என்னதான் செய்வான்?

"ஆ தெய்வமே! என்னையோ இக்கொடிய சோதனைக்கு ஆளாக்கினுய்? யாவர்க்கேனும் யான் தீங்கு செய்ததுண்டோ? நான் வில் வல்லவன்தான். என்ருலும், என்

மகன் தலையில் குறிவைத்தடித்தா என் வல்லமையைக் காட்டவேண்டும்? இத்தப் படுபாவி என்னைக்கொன்றாலும் அதற்கு வருந்தமாட்டேனே. என் கையாலே என் மகனைக் கொல்லும் வழியை யல்லவோ இப்பாவி தேடிவிட்டான்? எவ்வளவுதான் வல்லவனானாலும் என்ன? மகன் தலைமேல் குறிவைக்க எவன் தான் துணிவான்? தெய்வமே! இதுவும் உன் திருவிளையாட்டே போலும்?'' என்று தன் விதியையே நொந்துகொண்டான். மிகுந்த கலக்கமுற்றான்.

பின்னர் ஒருவாறு தேறினன். ஜெஸ்லரைப் பார்த்தான். "ஐயா! உமக்குக் கருணையில்லையா? வேண்டுமென்றால் வேறு பரீக்ஷையில் என் வில் வல்லமையைச் சோதித்துக்கொள்ளும். என்னுயிர்க்காக என் மகனுயிரை வாங்கமாட்டேன். நான் அப்படிச் செய்வேன் என்று நீர் எதிர்பார்க்கலாமா? வேண்டாம் ஐயா! தயவு செய்து வேறு பரீக்ஷை செய்யும்; அல்லது என்னைமட்டும் தண்டித்துக் கொள்ளும்,'' என்றான்.

ஜெஸ்லர்:—''எவ்வளவோ தயவுகாட்டித் தான் இந்தப் பரீக்ஷை வைத்திருக்கிறேன். நன்றாய் யோசித்துப் பார். நீ குறி தவறாமல் அடிக்கும் வில்லாளி. பழமோ உன் மகன் தலைமேல் வைக்கப்படுகிறது. பட்டாலென்ன? மகா வல்லவன் நீ. குறியைத் தவறாமல் அடிக்கிறாய். உயிர்ப்பிச்சை பெறுகிறாய். இதில் பயப்படுவதற்கு என்ன இருக்கிறது?'' என்று பரிகசித்துக் கூறினன்.

கேட்டான் தெல். கண்ணீர் ததும்பிவிட்டது. நாத் தழுதழுத்துவிட்டது. கை கால்களும் நடுங்கலாயின. நெஞ்சு படபடவென்றது. பெற்றவர்க்கன்றோ தெரியும் பிள்ளையினருமை!

மெல்லத் தன் கைகளை நீட்டித் தன் மகன் இருக்கும் இடத்தைச் சுட்டிக்காட்டினன். "ஐயா! பிரபுவே! அதோ

பாரும் என் அருமை மகனை; அவனுடைய விநயமான பால விளையாட்டுக்களை நீர் கண்டதில்லை. கண்டிருந்தால் இப்படிச் செய்யமாட்டீர். அவன் உம்முடைய உறவினன் இல்லை. அதனால் உமக்கு அவனிடம் அன்புண்டாகவில்லை. என்னுடைய மார்பிலே விளையாடி மகிழ்ந்த மைந்தன் இவன் ஐயா! இவனையா முன்னிறுத்தி என் வில் வல்லமையைக் காட்டுவேன்? மகன் என்னும் பாசம்பற்றிக் கைகள் நடுங்குமே! அதனால் தொடுத்த அம்பும் குறித்த இலக்கில் தவறுமே! குறி பிழைத்தால் யான் விடும் பாணம் இவ் வருமைப் பாலனுடைய நெற்றியில் அல்லவோ தைக்கும்? நானே என் மகனைக் கொல்லும்படியான வழியைத் தேடி விட்டீரே! இது உமக்கு அழகாகுமோ? தயையோடு செய்யும் உதவியென்று இதைச் சொல்லுகிறீரே! இதை யாராகிலும் உதவி என்பாரா? ஐயா! நீர் குழந்தைகளின் அருமை தெரியாதவரோ? வேண்டா! என் மகனை விரைவில் விடுவியுங்கள். வேண்டுமெனில் என்னைக் கொன்று கொள்ளுங்கள்" என்றான்.

அவன் சொல்வன கேட்டு, ஜெஸ்லர் குறும்பாகச் சிரித்த வண்ணமாய், "ஹே! வில்லியம் தெல்! இரண்டில் ஒன்று சொல். நான் சொன்னபடி செய்கிறாயா? அல்லது சாகிறாயா? என்று கேட்டான்.

தெல் "சாகிறேன்" என்றான். ஜெஸ்லர், "அப்படியா! ஆனால் உன்னைக் கொல்லுமுன் உன் மகனை உன் கண்ணெதிரிலேயே கழுத்தைத் திருகிக் கொல்வேன்; பின்பேதான் உன்னைக் கொல்லுவேன்; தெரிந்ததையா?" என்று கடுமையாய்க் கூறினான்.

"ஆ தெய்வமே" என்றான் தெல். சற்றுநேரம் அவன் யாதும் தெரியாமல் சித்திரம்போல் நின்றிட்டான். சட்டெனத் தலைநிமிர்ந்து, "அப்படியானால் என் கையில் வில்லும் அம்பும் கொடும்" என்றான்.

அவ்வளவிலே அவன் கையில் ஒரு வில்லும் சில பாணங்களும் கொடுக்கப்பட்டன. அம்புகளைச் சோதித்து அவற்றுள் இரண்டு அம்புகளை எடுத்துக்கொண்டான். மகனிருக்கும் இடத்தைப் பார்த்தான். நெஞ்சம் துண்ணென்றது. உடனே ஜெஸ்லரை நோக்கி, "ஐயா! நீங்கள் செய்யும் பரீக்ஷைக்கோ உடன்பட்டு விட்டேன். ஒரே வேண்டுகோள். என் மகன் முகத்தைக் காண என் கைகள் நடுங்குகின்றன. ஆதலால் அவனை என் முகம் பாராதபடி மரத்தோடு திருப்பிக் கட்டுங்கள்" என்றான்.

அதற்குள், "அம்பெடுத்த தந்தை தயங்குவது கண்டான் தநயன. 'என் அருமைத் தந்தையே! வில்வல்லவரே! நீர் என் தைரியமிழக்கின்றீர்? நான் அசையாமல் பதுமைபோல் நிற்கிறேன். பதருமல் குறி பார்த்துத் தவருமல் அடியும்" என்றான். துணிவு பிறந்து விட்டது தெல்லுக்கு. உடனே, "சரி, அப்படியே யாகட்டும்" என்றான். கையிலே வில்லை எடுத்தான். நாணையேற்றினான், அம்புகள் இரண்டில் ஒன்றை இடுப்பில் சொருகினான். மற்றொன்றை வில்லிலே தொடுத்தான். ஜனங்கள் இரு வரிசையாய் விலகி நின்றார்கள். குறிப்பிட்ட இடத்திலே தான் நின்றுகொண்டு, வில்லைத் தோளுற வாங்கினான்.

வில்லை வளைத்த தெல், இரண்டொரு நிமிஷம் கண்களை மூடி ஏதோ முணுமுணுப்பான் போலத் தோன்றினான். உண்மையில் அவன் கடவுளை மனதிலே தியானித்து வழிபட்டான். முணுமுணுக்கவில்லை. பின் வில்லில் தொடுத்த பாணத்தைப் பழத்தின்மேல் விடுத்தற்குக் குறி கொண்டான்.

அப்பொழுது அவன் முகம் அவன் மன நிம்மதியை நன்குகக் காட்டியது. அவன் கைகள் நடுங்கவில்லை. கண்கள் இமைக்கவில்லை. நீர் ததும்பவில்லை. இரண்டு விநாடி அந்த லக்ஷியத்தைக் கூர்ந்து பார்த்தான். பார்த்தவன்,

தொடுத்த பாணத்தை வலித்துவிட்டான். பாணம் விண்ணென இசைத்துச் சென்றது. கண்ணிமைக்கும் முன், சிறுவன் தலைமேலிருந்த பழம் இரு துண்டாய் விழுந்தது. அனைவரும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. ஆரவாரம் செய்தனர்.

ஜெஸ்லர், தெல்லைப் பார்த்து, "உன்னுடைய ஆற்றல் புகழத் தக்கதே. இப்புகழுக்கு உரிய நீ ராஜ விசுவாசியாயில்லை, அது ஒரு குறையே" என்றான். தெல்லோ மறுமொழி யொன்றும் கூறவில்லை. விடுவிக்கப்பட்ட தன் மகனைத் தழுவிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். ஒருபுறம் அவனுக்குத் தன் மகன் பிழைத்ததில் அளவிலா மகிழ்ச்சி. மற்றொருபுறம் இந்தக் கொடிய சோதனை செய்த ஜெஸ்லரிடம் தணியாப் பெருங்கோபம். இந் நிலையில் அவன் தன் மடியிலே சொருகிய பாணத்தை எடுத்தான்.

ஜெஸ்லர்: "ஏ ராஜத்துரோகியே! உன்னை யொன்று கேட்க விரும்புகிறேன். அந்த லக்ஷியத்தை யடிக்க இரண்டு பாணங்களை ஏன் கொண்டாய்? அதை ஒரே முறையில் அடிக்கவேண்டும் என்றல்லவோ சொன்னேன்?" என்று கேட்டான்.

தெல்: "வேறொன்றுமில்லை. முதற் பாணம் குறியைத் தவறி என் மகனை யடித்தால் உன்னையடிக்கக் கொண்டது இந்த இரண்டாம் பாணம்" என்று கோபத்துடன் கூறினான்.

ஜெஸ்லர்: "அப்படியா! உன் பாணத்தை யஞ்சியே தான் நான் இனி உயிர்வாழ வேண்டும். இல்லையா? நல்லதப்பா! உனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்து விட்டேன். அதனால் உன்னைக் கொல்லமாட்டேன். உன்னால் என் உயிருக்கு ஆபத்துண்டு எனத் தெரிகிறது. ஆதலால் உன் பாணம் என் மார்பிற் பாயாதிருக்க உன்னைச் சிறையில்

வைக்கிறேன். ஆயுள் முடியுமட்டும் அங்குத்தானே நீ கிடப்பாய். நானும் உயிரச்சம் இல்லாமல் இவ்வுலகில் வாழ்வேன்" என்ருன். உடனே அவன் வீரர் தெல்லைத் திரும்பவும் பிடித்து விலங்கிட்டனர்.

தெல் மீண்டும் ஆபத்துக்கு ஆளாய்விட்டதை நினைந்து எல்லோரும் கவலையுற்றனர். காவலரோ அவனைத் தள்ளிக் கொண்டு போய்விட்டார்கள்; கவர்னர் வந்திறங்கியுள்ள தோணியிலே அவனைச் சிறைவைத்தார்கள். சிறிது நேரத் துக்கெல்லாம் ஜெஸ்லரும் அங்கு வந்து சேர்ந்தான். தோணியும் ஊரி என்னும் ஏரியிலே பயணமாயது. நாம் ஒன்று நினைக்கின் தெய்வம் ஒன்று நினைக்குமல்லவா?

தோணி ஏரியின் நடுவிலே செல்லும்போது திடீ ரெனப் பெரும் புயலுண்டாயிற்று. ஏரியோ இயற்கை யிலேயே கொந்தளிப்புடையது. அஃதோடு புயற்காற்றும் சேர்ந்து மிகவும் கொந்தளிக்கலாயிற்று. ஜெஸ்லருடைய ஆட்களால் கொந்தளிக்கும் ஏரியில் தோணியைச் செலுத்த முடியவில்லை. எடுத்தெறியும் அலைகளால் தோணியோ தத்தளிக்கின்றது. அவர்களுக்கு, "இனி நாம் பிழைப்பதேது?" என்ற எண்ணமே யுண்டாய் விட்டது. கடவுளைத் தொழுதனர், திகைத்த நெஞ்சினர்.

அப்பொழுது ஜெஸ்லர், "நாம் அடைத்து வைத்துள்ள தெல்லை இங்கே யழைத்துவா" என்று ஒருவனை ஏவினன். அவனும் சென்று தெல்லை அழைத்து வந்தான். தெல்லைப் பார்த்து, "எப்படிப்பட்ட காலத்திலும் இந்த ஏரியில் நீ பட கோட்டுவாய் எனக் கேட்டிருக்கிறேன். இப்பொழுது யாதொரு கேடுமில்லாமல் தோணியை அக்கரையிற் செலுத்து. செலுத்தினல் உன்னை விடுதலை செய்வேன்" என்று ஜெஸ்லர் சொன்னன். தெல் அதற்கு இணங்கி னன். சுங்கானைத் தன் கையிலே கொண்டான். எப்படி யாவது இவர்களை அந்த ஏரியிலே தவிக்க விட்டுத் தான்

மட்டும் தப்பவேண்டும் என்ற எண்ணமே அவனுக்கு உண்டாயிற்று. அவன் அதனல் தோணியை ஏரியின் ஒரு புறம் இருந்த மலைக் கல்லோரமாய்ச் செலுத்தினன்.

அந்தக் கல்லை யடுத்ததும் தான் அதன்மேல் திடீரெனத்தாவி ஏறினன். தோணியை ஏரியின் நடுவே போகவிட்டான். பின்பு அக்கல்லின்மேல் விரைந்து ஏறிச் சென்றான். நல்ல ஒரு மறைவிடத்தே தங்கினன். தெய்வ வசத்தால் ஜெஸ்லரும் அவன் ஆட்களும் பிழைத்தாலும் அவர்கள் தன் கையம்புக்குப் பிழைக்கக்கூடாது என்று எண்ணினன். அதனல் வில்லில் நாணேற்றி அம்பு தொடுத்து வைத்துக் கொண்டான். வழிமேல் விழி வைத்து ஜெஸ்லர் வரவை எதிர்பார்த்திருந்தான்.

தெல் தன்னை வஞ்சித்துத் தப்பினன் என்று அறிந்தான் ஜெஸ்லர். அவனுக்குக் கோப மிக மூண்டது. கொந்தளிக்கும் ஏரியிலே அவன் கோபத்தைக் காட்டினல் என்னகும்? சற்றுப் பொறுமையோடு தோணியைக் கரை சேர்க்கச் செய்தான், ஒருவாறு கரையை யடைந்தான். அவன் தன் ஊர்க்குப் போதலை விரும்பவில்லை. தெல்லை அவன் ஊரிலே சென்று தண்டிக்க வேண்டும் என்பது அவன் கருத்து. தன் வீரரை யழைத்துக் கொண்டு தெல் ஒளிந்திருக்கும் மலைப்பாதை வழியே புறப்பட்டான்.

தெல், ஜெஸ்லர் வருவதைக் கண்டான். சரியான இலக்குப் பார்த்து வில்லேந்தி நின்றான். ஜெஸ்லருக்குத் தெல் வில் வைத்து நிற்பது தெரியாது. தன் காவல் வீரரைப் பார்த்து, "அந்தத் துரோகியான தெல்லையும், அவன் வமிசத்தாரையும் கொல்லாமல் நான் உயிர் விடுவதில்லை" என்று கோபத்துடன் சொன்னன்.

"இல்லை! இல்லை!! அதற்கு முன்னமேயே உன் உயிரை வாங்கி விடுவேன்" என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு, தெல் பாணத்தை விட்டான். அடுத்த கணமே

ஜெஸ்லர் பிணமாய் நெடு மரம் போலச் சாய்ந்தான். அவ னோடு வந்த வீரர் சற்றுத் திகைத்து நின்றனர். அப்பொ ழுது தெல் அடுத்தடுத்துப் பாணங்களைத் தொடுத்து விடுத் தான். அவர்கள், "யாரோ பலர் நம்மைத் தாக்குகின்ற னர்" என்று அஞ்சி போடி விட்டனர். அபாயமின்றித் தெல் தன் ஊரை யடைந்தான்.

சிறைப்பட்ட வில்லியம் தெல், வில்லும் கையுமாய் மீண்டதை அவ்வூரார் கண்டனர். ஆச்சரிய முற்றனர். "என்ன செய்தி? நீ எப்படி மீண்டு வந்தாய்?" என்ற னர். அவனும் அவர்களுக்கு நிகழ்ந்தவற்றைக் கூறினன். பின்பு "நண்பர்களே! அச்சத்தை ஒழியுங்கள்! அச்ச முள்ளவரைப் பெண்களும் மதியார்கள். ஆண்மையோடு அந்நிய நாட்டாரை எதிர்க்க வாருங்கள். அடக்கியாள் வோரை யடக்கி அமைதியுள்ள சுதந்திர வாழ்வைப் பெற விரும்புங்கள். ஜெஸ்லர் தொலைந்தான். வீழ்க அவன் கொடுங்கோன்மை. ஸ்விட்ஜர்லந்தின் சுதந்திரம் நீடூழி வாழ்வதாக" என்றனன். அவன் சொல் அநேகர்க்கு ஊக்கமளித்தது. பலர் வந்து அவனைக் கூடினர். பெரும் படையோ சேர்ந்து விட்டது. தெல் அவர்களைப் பார்த்து, "ஏ வீரர்களே! நாம் ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு. நம்மில் ஒற்றுமை நீங்கினல் அனைவர்க்கும் தாழ்வுதான்"; என்று பல நன்மதிகளைச் சொன்னன். ஜெயம் பெற்றான். ஸ்விட்ஜர்லாந்து மீண்டும் ஓர் சுதந்திர நாடேயாயிற்று.

ஸ்விட்ஜர்லாந்தினர், தெல்லைத் தங்கள் மன்னனா யிருக்கும்படி வேண்டினர். அவன் அதற்கு இசையவில்லை. எளிய வாழ்க்கை, உத்தம ஒழுக்கம், மனவமைதி, கடவுள் பக்தி, இவற்றையுடைய வாழ்வையே விரும்பினன். அத னல் பழையகுடிசை வாழ்க்கையனகவே வாழ்ந்தான்; எனி னும் புகழால் தனக்கு ஒப்பாவார் இல்லை எனச்சிறந்தான்.

---

## 3. ராஜா தேசிங்கு

மொகலாய வேந்தருள்ளே ஒருவன் ஔரங்கஸீப். அவன் ஹிந்துஸ்தான் முழுவதும் ஆண்டவன். தக்ஷிண தேசத்தில் கர்னாடகத்தின் பெரும்பகுதி அவனதே. அவன் தன் ராஜ்யத்தைப் பல பிரிவுகளாக்கினான். ஒவ்வொரு பிரிவுக்கும் நவாப் என்னும் தலைவனை நியமனம் செய்தான். நவாபுகளின் ஆட்சியுள் அடங்கி அநேக சிற்றரசர்களும் பாளையக்காரரும் இருந்தனர். ஜமீந்தார்களைப் பாளையக்காரர் என்பதும் வழக்கம்.

ராஜாதி ராஜனான ஔரங்கஸீபிற்குக் கர்னாடகத்திலேயுள்ள செஞ்சிக்கோட்டை யொன்றுமட்டும் கைவசப்படவில்லை. அது இயற்கை மலையரண் வாய்ந்தது; செயற்கைமதிலரணாலும் சிறந்தது. அன்றியும் மகா தைரியசாலியும் விவேகியுமான ராஜாராம் என்பவன் அதைக் காத்து வந்தான். அவன் காலனும் அஞ்சக் கலக்கும் மராட்டன்.

ஔரங்கஸீப் ஊகமும், ஊக்கமும், பிடிவாதமும் உள்ள மன்னன். ஆதலால் அவன் எப்படியாகிலும் செஞ்சியை வென்றேயாக வேண்டுமெனக் கங்கணம் கட்டிக் கொண்டான். அதற்காக ஒரு பெரிய சேனையை ஏவினான்.

அக்காலத்தில் கர்னாடகப் பிரிவை ஜுல்பிர்கான் என்ற பெயருடைய நவாபு மேற்பார்த்து வந்தான். அவன் சக்கரவர்த்தியனுப்பிய சேனையை நடத்திச் சென்று செஞ்சியை முற்றுகை யிட்டான். ராஜாராமும் அஞ்சாமல் எதிர்த்து நின்றான்.

என்னதான் எதிர்த்தும் ஐந்து வருடங்கட்கு மேலும் ராஜாராம் ஆற்ற முடியவில்லை. செஞ்சியைவிட்டுக் கொடுத்தான். ஜுல்பிர்கான் தான் செஞ்சியை வென்ற செய்தியைப் பாதுஷாவிற்குத் தெரிவித்தான். பாதுஷா மகிழ்ந்து அவனுக்கு வெகுமதிகள் பலவும் கொடுத்தான். 'தக்க ஒரு

ராஜபுத்திரனைச் செஞ்சியின் சிற்றரசனுக்கி அரசாள்க' எனப் பனித்தான். அவ்வண்ணமே ஜுல்பிர்கானும் தனக்கு வேண்டியவனான சிரோப்சிங் என்பவனைச் செஞ்சியின் அரசனாக்கினான்.

சிரோப்சிங் அறிவும் ஆற்றலும் அமையப் பெற்றவன். இனிய சொல்லினன். ஈகையன். எண்ணித் துணியும் கருமத்தன். யானையேற்றம் குதிரையேற்றம் இவற்றில் வல்லவன். காலங் கருதிக் கொக்குப் போன்றிப்பான். சமயம் வாய்த்தால் அதன் குத்துப்போலக் காரியத்தைத் தப்பாமல் செய்து முடிப்பான்.

இவன் சிற்றரசனான உடனே தன் படையைத் தான் முதலிலே பெருக்கிக் கொண்டான். பின்பு தன் ராஜ்யத்தின் அபிவிருத்தியைக் கவனித்தான். அவன் ராஜ்யம் தெற்கே திருச்சிராப்பள்ளி வரையும் பரந்து கிடந்தது. அதனால் அவன் மிகுந்த பொருளைச் சேகரம் செய்து கொண்டான். முடிமன்னனாகத் தக்க சமயம் எதிர்பார்த்திருந்தான்.

அவன் எதிர்பார்த்த நற்காலமும் வாய்த்தது. ஔரங்கஸிப் இறந்துவிட்டான். டில்லியரசன் இறந்தது கேட்டுச் சிற்றரசர்களிற் சிலர் குழப்பம் செய்யலாயினர். அவர்களிற் பெரும்பாலாரை ஔரங்கஸீபின் மகனான ஷா-ஆலம் ஒருவாறு அடக்கிவிட்டான். இச்சமயத்தில் படைப் பெருக்கும் பொருட் செருக்குமுடைய சிரோப்சிங், நவாபுக்குக் கட்டி வந்த கப்பத்தை நிறுத்திவிட்டான். ஜுல்பிர்கான் சிரோப்பின் வலி மிகுதியையஞ்சி ஒன்றும் செய்யமாட்டாமல் இருந்தான். அவனுக்கு அச்சமும் அழுக்காறும் உண்டாயின. தன்னுடைய பலக் குறைவை எண்ணி யெண்ணி நெஞ்சம் புண்ணாயினன். சமயம் வாய்த்தால் சிரோப்பைத் தாக்குவது எனத் தீர்மானித்திருந்தான்.

சிரோப் தன் திறமையாலும் குணத்தாலும் குடிக ளின் பயபக்திக்குப் பாத்திரனுனன். எல்லோரும் அவன் ஆட்சியை விரும்பினர். அவனும் மன்னுயிரைத் தன் னுயிர் போலப் பேணிக் காத்தான்.

ராம்பராய் என்னும் பெயருள்ள குணவதி அவனுக்கு மனைவியாயினள். அவளுடைய அழகு, குணம், இவற் றைச் சுருங்கச் சொல்லிவிடலாம். அழகு அவளைத் தவம் செய்து பெற்றது. குணமென்னும் பூங்கொடி அவளைக் கொம்பாகக் கொண்டு படர்ந்தது. இப்படிப்பட்டவ ளுடன் கூடி வாழ்ந்த சிரோப்பிற்குப் புத்திரப் பேறில் லாக் குறை யிருந்தது. அதை நீக்கிக்கொள்ள அநேக தான தருமாதி சற்கருமங்களை அவன் செய்தான்.

அவன் செய்த புண்ணியங்களே ஓர் உருவெடுத்தாற் போல அவனுக்கு ஓர் ஆண்குழந்தை பிறந்தது. சிரோப் பின் மனக்குறையும் தீர்ந்து விட்டது. அவன் நாட்டிலே மலடியுங் கூடத் தான் பிள்ளை பெற்றதாய் எண்ணி மகிழ்ந் தாள் என்ருல் பிறர் மகிழ்ச்சியைச் சொல்ல முடியுமோ?

சிரோப்பின் மகன் கடல் நடுவிலே எழுந்த இளஞ் சூரியனைப் போலத் தேக காந்தியோடு விளங்கினுன். அம் மகனைக் கண்குளிரக் கண்டு மிகவும் இன்புற்ருன். சிரோப் தன் மகனுடைய தேககாந்தியை வியந்து அவ னுக்கு ஜெயசிங்கு என்று பெயரிட்டான். அப்பெயர் நாள டைவில் தேசிங்கு என மருவி வழங்குவதாயிற்று.

தேசிங்கு ஐந்து வயதானதும் அவனைக் கல்விக்கு உரியனுக்கினுன் தந்தை.

"தந்தை மகற்காற்று முதவி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

என்பது வேதமொழி யன்ருே? முன்னுளில் அரசர்க்கு உரிய கல்வி வேத சாஸ்திரங்கள் மட்டுமல்ல; யானையேற் றம், குதிரை யேற்றம், தேரோட்டம், வில்லேற்றம், வாட்

போர், மற்போர் முதலியன பலவும் உண்டு. அக்கலைகளிலே தேசிங்கு வளர்பிறைச் சந்திரனைப்போலத் தேர்ந்து வந்தான். அவனிலும் முந்தி அவனிடம் கலைகள் வளர்வனவாயின.

தேசிங்கின் உயிர்த் தோழன் மகமதுகான் என்பவன். அவனை ஒரு கணமேனும் தேசிங்கு பிரிந்ததேயில்லை. மகமதுகான் தேசிங்கை ஒத்த வயதினன். அவன் கலைகளிலும் தேசிங்கிற்குத் தாழ்ந்தவனில்லை. தன் மகனுக்கு அருமை நண்பனான மகமதுகானையும் தன் பிள்ளையே போலச் சிரோப்சிங் பேணினன். தன் அரண்மனையிலேயே அவனையும் உடன்கொண்டு வாழ்வதானன்.

ஒரு சமயம் தேசிங்கு, தன் ஆருயிர்த் தோழனான மகமதுகானும் மற்றும் சில நண்பரும் தொடர்ந்துவர வேட்டைக்குச் சென்றான். காட்டினில் வேட்டைகளாடிக் களைத்தனன். ஒரு பொய்கைக் கரையோரமாய்ச் சிரமபரிகாரம் செய்துகொண்டான். நாட்டிற்குத் திரும்பினன். திரும்புகையில் திடீரெனப் பெரும்புலி யொன்று அவன் நண்பரில் ஒருவன்மேற் பாய்ந்தது. அதே நிமிஷத்தில் தேசிங்கும் அதன்மேற் பாய்ந்தான். தேசிங்கிற்கும், அவன் நண்பன் இருந்த இடத்துக்கும் நாற்பதடி தூரம். அவ்வளவு தூரத்தை அவன் ஒரே பாய்ச்சலில் தாண்ட முடியவில்லை. சுமார் முப்பதடியே பாய்ந்திருப்பான். எஞ்சிய பாகத்தை விரைந்தோடிக் கடந்தான். தன் கையிலிருந்த ஈட்டியால் அந்த வேங்கையை எறிந்து கொன்றான். தன் நண்பனைக் காப்பாற்றினன். புலி பாய்ந்து கௌவிய பற்கள் பதிந்தமையால் உண்டான புண்களே அவன் நண்பனுக்கு இருந்தன. நல்லகாலம் உயிராபத்தில்லை.

தேசிங்கை அவன் நண்பர் எல்லோரும் புகழ்ந்தனர். அவன் ஆற்றலையும் அஞ்சாமையையும் மிகவும் பாராட்டி வியந்தனர். அவருள் ஒருவன் விதூஷகன். அவன், "நம்ம

மகாராஜா ஓர் ஆண்பிள்ளை சிங்கம். எவ்வளவுதான் பெரும் புலியானாலும் என்ன? சிங்கத்துக்கு முன்னே அது நிற்க முடியுமா? நிச்சயமாய்ச் சொல்லுவேன்; புலியை யடிக்கும் சக்தியுடையதுதான் சிங்கம். இல்லாவிட்டால்... மிருகேந்திரனாக முடியுமா? ஆனாலும் சிங்கத்துக்குப் புலி போலப் பாயத்தான் முடியாது" என்று விளையாட்டாகப் பேசினான்.

அவனுடைய விளையாட்டு வார்த்தைகள் தேசிங்குக்கு வருத்தத்தை விளைத்தன. "அந்தப் புலி பாய்ந்ததூரம் நாம் பாயவில்லை என்றல்லவோ இவன் சொல்லுகிறான்?" என்று எண்ணினான். நாணமுண்டாயிற்று. தான் புலியை வென்றதை நினைந்து அவன் மகிழவில்லை. புலிபோலப் பாயாமை நினைந்து வருந்தினான். தன் வருத்தத்தை வெளிக்காட்டாமலே நகர் சேர்ந்தான்.

அரண்மனையை அடைந்ததும் அவன் நேரே தன்னுடைய தேகாப்பியாசச் சாலைக்குச் சென்றான். அங்குச் சுவரின்மேல் நாற்பதடி உயரத்தில் அடையாளம் ஒன்று செய்தான். தரையிலே மண் பரப்பினான். பின்பு நாள் தோறும் காலையும் மாலையும் அந்த அடையாளத்தைத் தொட மேலே எவ்விப் பாய்வான். தரையிலே தாவுவான். இப்படியாகச் சில வாரங்கள் சென்றன. தேசிங்கு தன்னுடைய நண்பன் மகமதுகானையும் சேர்த்துக்கொண்டான். கடைசியில் தேசிங்கு தான் குறித்த அளவு உயரமும் தூரமும் பாய்ந்து தாவ வல்லனானான். மகமது கானுக்கு முப்பதடி தூரமும் உயரமும்தான் பாய்ந்து தாவ முடிந்தது.

தேசிங்கிற்குத் தன்னுடைய பாயும் ஆற்றலைப் பலர்க்கும் முன்னிலையிற் காட்டவேண்டுமென்ற பேரவா; அதனால் அவன் தன் நண்பராயினர் எல்லோரையும் வரவழைத்தான். அவர்கள் காணவே தன் கையில் குங்குமக் குழம்பைத் தோய்த்துக் கொண்டான். மேலே எவ்விப் பாய்ந்

தான். நாற்பதடி உயரத்திலுள்ள அடையாளத்தின்மேல் தன் ஐந்து விரலும் பதிய ஓர் அறை அறைந்தான். ஐந்து விரல்களின் அடையாளமும் நன்ருகச் சுவரிற் பதிந்தன. பின்பு மண் பரப்பிய தரையிலே நாற்பதடி தூரம் தாவிக் காட்டினுன். அங்குள்ளார் அனைவரும் அவனுடைய ஆற்றலை வியந்து புகழ்ந்தனர்.

தேசிங்கு அங்கிருந்த விதூஷகனைப் பார்த்தான். "ஏனப்பா! பாய்வதிலே புலிக்குச் சிங்கம் இளைக்காது என்பது தெரிகிறதா?" என்ருன். முதலில் தேசிங்கின் கருத்து அவனுக்குச் சரிவர விளங்கவில்லை. சற்று யோசித்தான். அவன் விவேகி. வேட்டையாடிய நாளில் தான் சொன்னது அவன் ஞாபகத்திற்கு வந்தது. உடனே தேசிங்கின் கால்களிலே விழுந்தான். "மகாராஜா! கோபங் கொள்ளவேண்டா. அடியேன் சந்தோஷ மிகுதியால் சொன்ன விளையாட்டு வார்த்தையை வினையாகக் கொண்டு விட்டீர்களே. உங்கள் ஆற்றலை உலகமறியுமே. முன் பின் யோசியாமல் எளியேன் சொன்ன குற்றத்தை மன்னிக்க வேண்டும்" என்று கெஞ்சினுன். தேசிங்கு அவனை எழுப்பித் தேற்றினுன். "நீ விளையாட்டாகவே சொன்னுய். அதை நான் நன்கு அறிவேன். விளையாட்டாகச் சொல்லவும் ஒரு குறை என்னிடம் இருந்ததல்லவா? அதை நீக்க வேண்டாமோ? அதனுலேதான் உன் சொல்லை வினையாகக் கொண்டேன். அஞ்சாதே! நீ அந்த வார்த்தையை அன்று சொல்லாதிருந்தால் இன்று இவ்வாற்றல் எனக்குண்டாகுமோ?" எனச் சொல்லி இன்புறுத்தினுன். அரசர்க்கு மானமே பூஷணமன்ருே?

தேசிங்கின் அபாரமான தோள் வலியும் ஆண்மையும் ஊக்கமும் நாடு முழுவதும் பிரசித்தி பெற்றன. எங்குப் போனுலும் பேசப்படுவது அவன் புகழாயிருந்தது. இப்படியிருக்கும் நாளில், சிரோப்சிங்கிடம் ஓர் புதிய வீரன் வந்து சேர்ந்தான். அவன் அந்நிய தேசத்தவன். மன்ன

வனைக் கண்டு அடி வணங்கினன். "ஏ! மகாராஜனே! நான் ஒரு மல்லன். அநேக இடங்களில் மல்யுத்தம் செய்து வெற்றி பெற்றுளேன். பேரரசரும் சிற்றரசரும் எனக்குச் சன்மானங்கள் செய்திருக்கின்றனர். 'உங்களுடைய ஆஸ்தானத்தில் உயர்ந்த வீரர்கள் இருக்கிறார்கள் எனக் கேள்விப்பட்டேன். என்னோடு மல்யுத்தம் செய்ய உங்கள் வீரரை ஏவுங்கள். அவர்கள் வென்றால் என் வெற்றி விருதுகளை அவர்களுக்குக் கொடுத்துவிடுகிறேன். அடிமையு மாகிறேன். இல்லையெனில் எனக்குத் தக்க மரியாதை செய்ய வேண்டுகிறேன்" என்றான். சிரோப் "நாளை என் வீரர் ஆயத்தமாயிருப்பார். நீ நாளை வா" என்று கூறி அந்த மல்லனை யனுப்பிவிட்டான். "நாளைக்கு ஒரு பெரிய மல்யுத்தம் நடைபெறும்". என்று பறையடித்து ஊரவர்க்குத் தெரிவித்தனர் ராஜ சேவகர்.

சிரோப், அன்றிரவு தன் ஆஸ்தான மல்லர்களை வரவழைத்தான். அன்னிய தேசத்தான் ஒரு மல்லன் வந்திருக்கும் செய்தியைச் சொன்னான். அவனுக்கும் முந்தியே அவ்வீரர்களுக்கு அந்த மல்லன் வந்திருக்கும் செய்தி தெரியும். 'அந்தப் புதிய மல்லன் போரில் மகா நிபுணன்' என்று அவர்கள் அறிந்தவர்கள்: ஆதலாலே அச்சங் கொண்ட மனத்தரானார்கள். மெல்ல, அரசனிடம், புதிய மல்லனிடம் தங்களுக்குள்ள அச்சத்தைக் குறிப்பாக வெளியிட்டனர். 'போர் செய்யமுடியாது' என்று சொல்லாமற் சொன்னார்கள். சிரோப் அவர்களது கோழைத்தனம் கண்டு கோபங் கொண்டான். "என்ன! நான் வீரர்கள் என்று வைத்திருக்கும் உங்களில் ஒருவருக்கும் அவனை எதிர்க்க வல்லமை யில்லையா? மகா கேவலம். அந்தோ! என்னுடைய ஆஸ்தானத்துக்கன்றோ அவமானம்!" என்று மனம் புழுங்கிச் சொன்னான். அவ்வீரர்களை, "என் கண்ணெதிரே நில்லாதீர்கள். போங்கள்" என்று அனுப்பிவிட்டு, தான் கவலையோடிருந்தான்.

அப்பொழுது அங்குவந்த தேசிங்கு நடந்தனவற்றைக் கேட்டுத் தெரிந்துகொண்டான். நேரே தந்தையிடம் சென்றான். "அப்பா! நான் அந்த மல்லனோடு போர் தொடுக்கிறேன்" என்றான். சிரோப்பிற்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவே யில்லை. "அப்படியே யாகட்டும்" என்றான். அவன், போரென்ன வீங்கும் புனைகழல் வீர னன்றோ?

மறுநாட் காலையில், சிரோப் தன் மந்திரி பிரதானிய ரோடு மற்போர்ச் சாலையை யடைந்தான். மற்றும் ஜனங் களும் ஏராளமாய் வந்து கூடிவிட்டனர். மிகுந்த ஆடம் பரத்தோடு வந்தெய்தினான் மல்லன். அரசனை அடிபணிந் தான். போராடும் இடத்திற் புகுந்தான் மேலாடை களைந்தான். நிமிர்ந்து நின்று தன் இரு தோளையும் தட்டி பார்த்தான். கச்சினன், கழலினன். மலையெனத் திரண்ட தோளினன். தீப்பொறி பறக்கும் கண்ணினன். இடி யென முழங்கும் குரலினன். மத்தயானை போலத் தலை நிமிர்ந்து அட்டகாசம் செய்தான். "மகாராஜா! என் னோடு போர் செய்வானைக் காணோமே!" என்றான். "இதோ விருக்கிறேன்" என்று எழுந்தான் தேசிங்கு. திடுக்கிட்டான் மல்லன். அனைவரும் ஆச்சரிய முற்றனர்.

மல்லன்:—"அரசே! இளவரசரையா என்னோடு போர் செய்ய விட்டீர்? இவரோ சிறு வயதினர். தோள் வலியுடையராகவே தோன்றுகிறார். என்றாலும் என்னு டைய ஆற்றலுக்கும் அநுபவத்திற்கும் இவர் எதிர் நிற்க முடியுமா? இவரை நான் வென்றாலும் தோற்றாலும் வசையே யல்லவோ பெறுவேன்? ஆதலால் உங்கள் ஆஸ் தான மல்லரில் ஒருவனை என்னோடு போர் செய்ய விட வேண்டும்" என்றான்.

சிரோப்சிங் :—"உன்னோடு போர் புரிவார் யாராயி னும் உனக்கென்ன? இளைஞர் முதியர் என்ற வேறுபாடு வீரர்க்குள் உண்டோ? அபிமன்யு, தான் சிறுவனாயினும்

பாரதப் போரில் பெரும் படையைக் கலக்கினுன் அன்ரே? என் மகன் தேசிங்கு நல்ல வீரன். இதனை மதியாது பேசியது உனக்கு அடாது. தோற்ருர்க்கேயன்றி வென்ருர்க்கும் வசையுண்டாகுமோ? ஆதலால், சற்றும் தயங்காமல், என் மகன் என்று நினையாமல், இவனேடு போர் செய்'' என்ருன்.

மல்லன் இணங்க வேண்டியவனுனன். தேசிங்கும் போராங்கினுட் புகுந்தான். இருவரும் கை கலந்தனர். தோளோடு தோள்களைத் தட்டினர். ஒருவரை ஒருவர் கழுத்திற் கைகொடு பற்றினர். கீழும் மேலும் விழுந்து புரண்டனர். நெற்றியை நெற்றியால் தாக்கி மோதினர். கையொடு பார்பிடை யெற்றினர். காலொடு காலைப்பின்னினர். சுற்றினர்; திரிந்தனர். 'ஹூம் ஹூம்' என்று பெருமூச்செறிந்தனர். இவ்வாறு பெரும்போர் புரிந்தனர். கூடியிருந்தவர், விழித்த கண் இமையால், திறந்த வாய் மூடாமல் போரைக் கவனித்தனர்.

இப்படியான போரிலே ஒருவரை ஒருவர் வெல்வது எளிதாகத் தோன்றவில்லை. சிறிது நேரம் கடும்போர் நிகழ்ந்தது. அதனிடையே தக்க வாய்ப்புக் கிடைத்ததும், தேசிங்கு மல்லனைச் செந்தூக்காய்த் தூக்கி யெறிந்தான். மல்லனும் நெடுமரம் போலக் குப்புற்று வீழ்ந்தான்.

வீழ்ந்தவனை மண்ணில் முதுகுபடப் புரட்டினுன் தேசிங்கு. மல்லனுடைய மார்பிலே தன் முழங்காலையூன்றினுன். 'தோற்றேன் என்று ஒப்புக் கொள்' என்ருன். மல்லனும் தன் தோல்வியை ஒப்புக்கொண்டான். தேசிங்கு அவனை விடுத்தான். தேவ துந்துபியின் ஆர்ப்புப்போல அங்குள்ளார் மகிழ்ந்து ஆரவாரித்தனர். சிரோப்பிற் குண்டான மகிழ்ச்சிக்கு ஓர் அளவு வேண்டுமே! மல்லன் தலை குனிந்து நாணி நின்ருன். களிப்பு மிகுதி அரங்கிலுள்ளவர்க்கு ஒருவாறு அடங்கத் தொடங்கியது.

தேசிங்கு அந்த மல்லனைக் கைகொடுத்துத் தன் தந்தையிருக்குமிடம் அழைத்துச் சென்றான். 'என் அருமைத் தந்தையே! இவன் மற்போரில் மிகவும் தேர்ந்தவன். தோற்றவன் என்று இவனை இகழவேண்டா. இவன் மகா நிபுணன். இவன் ஆற்றலுக்கு எதிர் நிற்க யாவராலும் முடியாது. அப்படிப்பட்ட வீரன்! உண்மையான வீரனாகிய இவன் சன்மானிக்கத் தக்கவன். இவனைச் சன்மானிப்பது என்னைக் கௌரவிப்பது போலாகும்' என்று சொன்னான். சிரோப், தேசிங்கின் இஷ்டப்படியே மல்லனுக்கு வேண்டிய பரிசுகள் நல்கினான். கௌரவம் செய்தான். அந்த மல்லனும், தகப்பனும் மகனும் செய்த மரியாதைகளால், தான் தோற்றதையும் மறந்திருந்தான். சில நாள்கள் தேசிங்கோடு கூடவே தங்கினான். பின்பு விடைபெற்றுத் தன் தேசம் சென்று விட்டான்.

ஜனங்களுக்குத் தேசிங்கின் பெருந் தன்மையான குணம் நன்றாகத் தெரியவந்தது. தசரதராமனை அயோத்திமாந்தர் எவ்வளவு நேசித்தார்களோ அவ்வளவு கர்னாடகத்தவர் தேசிங்கை நேசித்தனர். இராமன் பரசுராமனை வெல்லக் கண்ட தசரதன் எவ்வளவு மகிழ்ந்தான்! அவ்வளவு மகிழ்ந்தான் மல்லனைத் தேசிங்கு வெல்லக் கண்ட சிரோப்சிங். சில நாள்வரையும் எங்குப் பார்த்தாலும் தேசிங்கின் ஆற்றலும் பெருந்தன்மையும் பற்றிய பேச்சே நிகழ்ந்தது.

இப்படியிருக்கும் நாளில், செஞ்சிக்கு டில்லி பாதுஷாவின் தூதன் ஒருவன் வந்தான். நேரே சிரோப்பிடம் சென்றான். பாதுஷாவின் தூதன் என்றறிந்து அவனுக்கு உரிய மரியாதைகளைச் சரிவரச் சிரோப் செய்தான். "வந்த காரியம் என்ன?" என்றான். தூதன் மறுமொழி யொன்றும் கூறாமல் ஒரு திருபத்தைக் கொடுத்தான். "நாம் பகுதிப் பணம் கட்டவில்லையே. பாதுஷா அது குறித்து ஏதேனும் உத்திரவிட்டிருப்பாரோ?" என்ற துணுக்கம் சிரோப்பிற்கு

உண்டாயிற்று. அவன் அதை வெளிக்காட்டவில்லை. திருபத்தைப் பிரித்துப் பார்த்தான்.

அதில், "நண்பர் சிரோப் சிங்கிற்கு : உடனே புறப்பட்டு நம்மிடம் வருக. ஷா-ஆலம்" என்றுமட்டும் எழுதியிருக்கக் கண்டான். அவனுக்கு இன்னதுதான் செய்வது எனத் தெரியவில்லை. மறுமுறையும் திருபத்தைப் பார்த்தான். "நண்பர் சிரோப் சிங்:" என்று தனக்குள்ளே வாசித்தான். அவனுக்குக் கொஞ்சம் தைரியம் பிறந்தது. "அங்கே செல்வோம். சமயோசிதம்போல நடந்துகொள்வோம். பாதுஷாவின் ஆணையை அவமதித்தோம் என்ற குற்றம் வேண்டா" என்று எண்ணினான். அன்றிரவு தன் மனைவி ராம்பாயிடம் தன்னுடைய டில்லிப் பயணத்தைத் தெரிவித்தான்; பிரியாவிடையும் பெற்றுக்கொண்டான்.

மறுநாட் காலையில், தேசிங்கை வரவழைத்தான். தன் அருகே அமரச்செய்து, "அருமை மகனே! நான் டில்லிமாநகரம் சென்றுவருகிறேன். பாதுஷாவின் ஆணையைக்கடப்பது நமக்கு அழகன்று. அன்றியும் அவர் நண்பராகப் பாவித்து அங்கேவரும்படி வேண்டுகிறார் எதன்பொருட்டு அழைக்கிறார் என்பது எனக்கே தெரியாது. நான் சமயோசிதம்போல நடந்து கொள்வேன். அவருடைய அன்பிற்கு ஆளாகியே நான் மீள்வேன். நான் வருமளவும் நம்முடைய நாட்டை நீ நன்றாகப் பரிபாலிக்கவேண்டும். அப்பா குழந்தாய்! வேட்டை முதலிய விளையாட்டுக்களை நிறுத்திவிடு. நீ இனிப் பொறுப்பு மிகவுமுடையாய். ஆதலால் கருத்து ஊன்றி ராஜ காரியங்களைக் கவனித்துவா", என்று நன்மதிகள் கூறினான். பின்பு அதுவன் பின்தொடர டில்லிக்குப் பயணமானான். விரைந்து சென்றான். சில நாளில் டில்லியை அடைந்தான். பாதுஷாவின் ஓலக்க மண்டபத்துக்கே நேராகச் சென்றான்.

சிரோப் சிங் வருவதை யறிந்து, பாதுஷாவான ஷா-ஆலம் இன்மொழி கூறி வரவேற்றான். காண்போர்க்கு

அவர்கள் இரு பெருவேந்தரே போலத் தோன்றினர். சிரோப், சக்கரவர்த்தியை வணங்கி, "எளியேனையும் அன்பு கொண்டழைத்தீர். கௌரவப்படுத்தினீர். அண்ணலே! நீர் எனக்குச் செய்த பெருஞ் சிறப்பிற்கு நான் உமக்கு வழியடிமையாகத் தகும்" என்று சொல்லித் தன் நன்றியைத் தெரிவித்தான். பின்பு, "ஓ ராஜாதிராஜ! நீர் உத்திர விட்டிருந்தால் நான் அங்கிருந்தே வேண்டிய பணி செய்ய மாட்டேனே?" என்றான்.

ஷா ஆலம்:—"அப்படி யொன்றும் பணித்தற்கு அவசியம் நேரவில்லை. நம்மிடம் சில தினங்கட்கு முன், ஒரு குதிரை வியாபாரி வந்தான். பஞ்ச கல்யாணிக் குதிரை யொன்றைக் காணிக்கை வைத்து நம்மைப் பேட்டி கண்டான். அந்தக் குதிரை மிகவும் அழகுடையது. நல்ல சுழியுள்ளது. முடிமன்னர் ஊர்ந்து செல்லுதற்கு உரியது. ஆயினும் அது ஒருவர் கைக்கும் வசப்படுகிறதில்லை. நாம் குதிரைகளை அடக்கி யோட்டுதலில் வல்லமையுடையோம். நமக்குங் கூட அது வசப்பட்டதில்லை. இப்படிக் கைவசப் படாத குதிரையை என் செய்வது என யோசித்தோம். அப்பொழுது நம்முடைய மந்திரி பிரதானியர் உம்முடைய ஆற்றலைப் பாராட்டினர். இந்தக் குதிரையை நீர் அடக்கி விடுவீர் என்று தெரிவித்தனர். அதனல் உமக்குக் கடித மனுப்பி வரச் செய்தோம்" என்றான்.

பாதுஷாவின் வார்த்தைகளைக் கேட்ட சிரோப்பிற்கு மனதிலிருந்த ஐயம் முற்றிலும் நீங்கிவிட்டது. குதிரையை அடக்கவேண்டும் என்ற உடனே அவனுக்கு உற்சாக முண்டாயிற்று. அவன் குதிரை யேற்றத்தில் மகா நிபுணன். குதிரை சவாரி யென்றாற் போதும். அவனுக்கு உணவுகூடத் தேவையில்லை. அப்படிப்பட்டவன்! அதனாலே மனமகிழ்ந்தான். பாதுஷாவைப் பார்த்து, "ராஜாதிராஜ! நீங்கள் என்னை மிகவும் புகழ்கின்றீர்கள். இவ்வளவு புகழுக்கு நான் உரியனில்லை. என்னிடம் நீங்கள் காட்டும்

அன்பே என் வலிமை. அந்த வலியாலே குதிரையை யடக்க முயல்வேன். அது எங்குள்ளதோ?'' என்றான். குதிரையிருக்கும் இடத்துக்கு, சிரேப்பை ஷா-ஆலம் அழைத்துச்சென்றான். குதிரையைச் சிரோப் பார்த்தான்.

அவன் மனம் திடுக்கிட்டது! அவ்வளவு கெம்பீரமான குதிரை! அதை யடக்குவது எளிய காரியமில்லை என்பது சிரோப் மனத்தில் நன்றாகப் பட்டது. என்றாலும் அவன் தைரியத்தை யிழக்கவில்லை. குதிரையின் அருகே சென்றான்.

ஷா ஆலம் :—'' சிரோப்! எண்ணித் துணிக கருமம் என்பர். அந்தக் குதிரையின் தோற்றத்தைப் பாரும். எளிதில் அடக்கிவிடலாம் என்று நினைக்கிறீரோ?'' என்றான்.

சிரோப் அதற்கு மறுமொழியாக, ''எல்லாம் உங்கள் அருளின் வலியாலேதான் நடக்கவேண்டும்'' என்று சொல்லிவிட்டுக் குதிரையை நெருங்கினான். காவல்வீரர்குதிரையைப் பிணித்திருந்த சங்கிலியை அவிழ்த்து விட்டனர்.

சிரோப் அதனருகே சென்று தாவியேறப்போனான். அது தனது பின்னங்கால்களால் உதையத் தொடங்கியது. விலாப்புறம் சென்றான். அது தலையைத் திருப்பிக் கடிக்கத் தலைப்பட்டது. முன்புறம் சென்றான். முன்னங்கால்களைத் தூக்கி எறியத் தொடங்கியது. இப்படியாக அது அவனைத் தன் அருகிலே நெருங்கவும் விடாதாயிற்று.

சிரோப் பார்த்தான். சற்று நிதானித்து நின்றான். அதுவும் நின்று இவனையே பார்த்தது. கதுமெனப் புலி போலப் பாய்ந்து அதன் முதுகின்மேற் கொள்ளலானான். அதே நிமிஷத்தில் அதுவும் முன்னங்கால்களை உயர்த்தி நிமிர்ந்து நின்று தன் மேனியை யலைத்தது. சேணங் கட்டப்பெறாமையால் சிரோப் அதன் முதுகினின்றும் நழுவிக் கீழே விழுந்தான். அவ்வளவுதான் குதிரை உதைக்கத் தொடங்கியது. அவன்பாடு ஆபத்துக்கிடமாயிற்று.

பாதுஷாவின் படைவீரர் பலர் கூடினர். ஈட்டி முத லியவற்றால் குதிரையை அச்சுறுத்தினர். அது பயந்து அடங்கியது. அதைப் பிணித்துவிட்டனர்.

பலர்க்கும் முன்னிலையில் தனக்கு அவமானம் விளைந் ததை யெண்ணிச் சிரோப் மனம் வருந்தினன். ஷா-ஆலம் அவனைத் தேற்றினன். "நாம் அப்பொழுதே சொன் னேமே. அது முரட்டுக் குதிரை. இருந்தாலும் இன்னும் சிலநாள் அதனோடு பழகி அடக்க வழிபாரும். அதுவரை நம்முடைய அரண்மனை விருந்தாய் இருப்பீராக" என் ருன். சிரோப்பிற்கு அது தக்கதென்றுபட்டது. "எப்படி யாவது இந்தக் குதிரையை அடக்கிவிட்டுத்தான் சொந் திக்கு மீள்வது" எனத் தீர்மானித்துக்கொண்டான். அன்றுமுதல் காலையும் மாலையும் அக்குதிரை இருக்குமிடம் செல்வான். அதனோடு பழகத் தலைப்பட்டான். இவனை அது ஒருபொருளாக எண்ணவில்லை. குதிரை இடுப்பறியும் என்பது முதுமொழியன்றோ? இவ்வாறு சில மாதங்கள் சென்றன.

டில்லிக்குப் போன புருஷன் இன்னும் திரும்பவில் லையே என்று ராம்பாய் வருந்தினள். அவளுக்கு மன திலே பயமுண்டாயிற்று. "இன்னதற்கு என்று சொல்லா மல் பாதுஷா வரச்சொன்னனே. அவன் ஏதாவது தீங்கு செய்திருப்பானோ" என்ற ஐயமுண்டாயிற்று. அவள் கணவனை நினைந்து, உணவும் வெறுத்துச் சிலநாளாக வருந்தினள்.

தேசிங்கிற்குத் தன் தாய் படும் அவதி தெரியவந்தது. உடனே தன் தாயின் அரண்மனைக்குச் சென்றான். அம்மா! நீங்கள் சில தினங்களாக உணவும் கொள்ளவில்லையாமே? நீங்கள் கவலையுறுவதாகத் தெரிகிறது. வருந்தவேண்டா. நானே சென்று தந்தையார் நிலைமையறிந்து வருகிறேன். அவருக்கு ஒருவரும் தீங்கு செய்யார்; செய்தவருண்டா

னால் அவரைப் பழிக்குப் பழி வாங்குகிறேன். விடை கொடுங்கள்" என்றான். ராம்பாய் திடுக்கிட்டாள்.

"அப்பா மகனே! உன் தந்தைக்குத் துன்பம் நேர்ந்து விட்டது எனச் சொல்வாரில்லை. அந்தப் பாதுஷா வஞ்சகமாய் வரச்செய்தானோ எனச் சந்தேகம்கொண்டேன். ஆனாலும், ஒரு சக்கரவர்த்தி நயவஞ்சகம் செய்யான் என்று உறுதியாய் நம்பப்படுகிறது. அவரும் அப்படி நம்பித்தானே அங்கே போயிருக்கிறார். அதனால் நீ அங்குச் செல்லவேண்டா. நீயும் பிரிந்து சென்றால் இங்கே எனக்கு ஆறுதலாவார் யாருண்டு? ஆகலால் நீ போகவேண்டா" என்றாள்.

தன் தாய் மனத்திலுள்ள வருத்தத்தை மறைத்துப் பேசுகிறாள் என்று தேசிங்கிற்குப்பட்டது. அவள் பாதங்களில் விழுந்து பணிந்தான். "தாயே! உங்கள் மனதிலே என் தந்தைக்கு என்ன நிகழ்ந்துவிட்டதோ என்ற ஐயம் தோன்றிவிட்டது. அது என் மனதிலேயும் ஐயத்தை விளைத்துவிட்டது. உங்களுக்காகவன்றேனும், என் சந்தேகம் நீங்குவதற்காக நான் போகவேண்டும். என் தந்தையைக் கண்ட பின்புதான் என் மனம் ஆறுதல் அடையும். ஆதலால் தடை செய்யாதிரும். விடைகொண்டேன்" என்று சொல்லிச் சரேரென்று எழுந்து போய்விட்டான். ராம்பாய் மிகவும் வருந்தினாள். அங்குள்ளவர் தேசிங்கின் வீரதீரப் பிரதாபச் செயல்களைப் புகழ்ந்து அவளைத் தேற்றினர். அவளும் ஒருவாறு தேறியிருந்தாள்.

தேசிங்கு தன் ஆருயிர் நண்பனான மகமதுகானை யழைத்தான். தான் டில்லிக்குப் போவதைச் சொன்னான். மகமதுகான் தானும் தொடர்வதாகச் சொல்ல, தேசிங்கு அதற்கு உடன்படவில்லை. "நண்பா! நாட்டை உன்வசம் ஒப்புவிக்கிறேன். நான் சென்று வருமளவும் பார்த்துக் கொள். இன்றுமுதல் ஒரு வருஷத்துக்குள் என் செய்தி

உனக்குக் கிட்டிலதானல் என் உயிருக்கு ஆபத்துண்டு எனக் கருது. அதன்பின் நீ உன் மனம் போலச் செய்" என்ருன்.

மகமதுகான் : "ஒரு வருஷம் வரை மனம் பொறுத் திருக்கிறேன். அது கடந்தால் நம் படையைக்கொண்டு சென்று பாதுஷாவை எதிர்க்கிறேன். வென்ருலென்ன ? தோற்ருலென்ன பழிக்குப்பழி வாங்கி என் கடமையைச் செய்கிறேன் ; அல்லது அது செய்யும் முறையில் இறந்தாலும் என் கடமையில் தவறேனென்ருே ? என்ருலும் இத் துன்ப நிகழ்ச்சிகள் இல்லையாகுக. உனக்குச் சர்வ மங்களமும் உண்டாவதாக" என்ருன்.

, ஒருவரையொருவர் தழுவிக் கொண்டனர். தேசிங்கு டில்லிக்குப் பயணமானன் ; சிலவாரங்களிற் சென்றடைந் தான். அவனுக்குத் தன் தந்தைக்கு என்ன நிகழ்ந்தது என்று அறிய ஆவல். அவ்வூரிரே சிரோப்சிங் குதிரையிடம் அகப்பட்டுத் தவித்த பேச்சே பரவியிருந்தது. தேசிங்கின் காதிலே அந்தப் பேச்சு விழுந்தது. "நல்ல வேளை பாதுஷா நம் தந்தையிடம் பகை காட்டவில்லை. தம்முடைய முதுமையால் தந்தையார் குதிரைக்குச் சலித் தவரானர். அவர் கையிலே வசப்படாத குதிரையு முண்டோ ?" என்று எண்ணினன்.

அந்தக் குதிரையை அடக்கவேண்டுமென்ற ஆசை அவனுக்கு உண்டாயிற்று. தன் தந்தை காலையும் மாலையும் குதிரை யிருக்குமிடம் சென்றுவிடுகிருர் என்று தெரிந்து கொண்டான். அதனல், ஒருநாள், காலையிலே, பாதுஷா விடம் சென்ருன். பாதுஷாவைக் கண்டு வணங்கினன்.

நல்ல வாலிபமும் அழகும் வாய்ந்த தேசிங்கைக் கண்டதும் ஷாஆலம் மனமகிழ்ந்தான். அவனுக்கு வந் திருப்பவன் சிரோப்பின் மகன் என்பது தெரியாது.

ஷா ஆலம்:—யாரப்பா நீ! உனக்கு வேண்டுவதென்ன?

தேசிங்கு :—அரசே! பிறர் கைக்கு அடங்காதுள பஞ்ச கல்யாணியை யடக்கவேண்டும்.

ஷா ஆலம் :—ஆம், அதுதானே கூடாத காரியமா யிருக்கிறது.

தேசிங்கு :—நான் அடக்கிக் கொடுக்கலாமோ?

ஷா ஆலம் :—நீ யென்ன? பிறரென்ன? யாரும் அடக்கிக் கொடுக்கலாம். ஆனல் ஒன்று கேள். நீ நல்ல வாலிபனய் இருக்கிருய். அந்தக் குதிரையோ மிகவும் முரட்டுக் குண முடையது. உன்னிடத்தில் நமக்கு அன் புண்டாகிறது. நீ யாரென்று நாம் அறியோம். நீயோ அதை அடக்க முடியாது. நம்மைக் காட்டிலும் குதிரை யேற்றத்தில் வல்லவர் செஞ்சி மன்னரான சிரோப்சிங். அவரையும் அந்தக் குதிரை எடுத்தெறிந்து விட்டது. உன் ஞலாகுமோ? யோசித்துப் பார். வீணே உன் உயிரை ஆபத்திற்குள்ளாக்காதே.

தேசிங்கு :—ராஜாதிராஜா! சிறியேனிடம் நீங்கள் காட்டும் அன்புக்கு வழியடிமைசெய்யும் கடமையுடை யேன். குதிரையேற்றம் நானும் கொஞ்சம் பழகியிருக்கின் றேன். அந்தக் குதிரையை அடக்கிவிடலாமென்ற நம் பிக்கை எனக்கிருக்கிறது. வேறெப்படித்தான் என் ஆற் றலை உங்கள் சமுகத்திற் காட்டுவேன்? தயவுசெய்து உத் தரவளிக்கவேண்டும்.

ஷாஆலம், தேசிங்கு மன்ருடுவதைக் கண்டு, "சரி அப்படியே யாகட்டும்" என்று சம்மதம் கொடுத்தான். குதிரையேற்றம் மாலையிலே என்று தீர்மானமாயிற்று.

ஊரெங்கும், "யாரோ ஒரு வாலிபன் வந்திருக்கிரு ஞம். 'குதிரையை அடக்குவேன்' என்று பெருமை பேசி யிருக்கிருனம். இன்று மாலை குதிரை யேற்றமாம். சென்டு

வீதியிலே அது நடைபெறுமாம்" என்று ஒரே பேச்சாக விருந்தது.

மாலை நான்கு மணியிருக்கும். வையாளி வீதியிலே எள்ளுப்போட இடமில்லை அவ்வளவு கும்பல்! நடுவிலே ஆசனங்களிட்ட பந்தலிலே பாதுஷா வந்து சேர்ந்தான். அவனோடு சிரோப் முதலியோருமிருந்தனர். பாதுஷா சிவந்த ஆசனத்தமர்ந்தான். போர்வீரர்கள் கவசமிட்டு அணிவகுத்துச் சுற்றிலும் நின்றனர். சில வீரர்கள் குதிரையைச் செண்டுவீதியிற் கொண்டுவந்து நிறுத்தினர். கும்பலிடையே இருந்த தேசிங்கு அவ்வீதியுட் புகுந்தான். மேற் போர்வைகளைந்தான். கச்சும் கழலும் கட்டிய சிங்கக் குட்டிபோல நிமிர்ந்து நின்றான்.

"ஆ தேசிங்! நில்! நில்!!" என்றான் சிரோப்.

பாதுஷா திடுக்கிட்டான். "என்" னென்றான்.

"மன்னர் மன்ன! அதோ நிற்பவன் என் மகன் தேசிங்கு; அவனை இங்கு வரவழைத்திருப்பதை நீங்கள் சொல்லவில்லையே. அந்தக் குதிரையால் அவனுக்கு ஆபத்தல்லவோ விளையும்?" என்று வருந்திக் கூறினான்.

அதற்குள் தேசிங்கு வந்து பாதுஷாவை முதலில் வணங்கினான். பின் தந்தையை வணங்கி, "தந்தையே! வருந்தாதீர். நானாகவே இங்கு வந்தேன். இக்குதிரையை அடக்கிய பின் உம்மிடம் பிறவற்றைச் சொல்லுகிறேன். ஆசி கூறும்" என்று விடைகொண்டான். குதிரையிடம் சென்றான். சிரோப்பிற்குத் தேசிங்கு சிறுவனாயிருக்கையில் புலியை யஞ்சாது எதிர்த்தது ஞாபகத்தில் வந்தது. "புலியை யெதிர்த்த புருஷசிம்மம். குதிரைக்கா பயந்து புறங் கொடுக்கும்?" என எண்ணி ஆறுதலுற்றான்.

பாதுஷா, சிரோப்பைப் பார்த்து, "உமக்குத் தேசிங்கு என்ற பெயருடைய மகனுண்டு எனக் கேட்டிருக்கிறோம்.

அவனை இன்றுதான் கண்டோம். இவன் அநேக வீரச் செயல்களைச் செய்திருப்பதாகக் கேள்வியுண்டு. அப்படி யிருந்தும் பயபக்தியுள்ளவனுயிருக்கிருன். நீர் நல்ல பாக்கியசாலி. உத்தமமான புத்திரனைப் பெற்றிருக்கிறீர். இவன் அந்தக் குதிரையை யடக்கிவிடுவான் என்றே நம்புகிருேம்'' என்று தேசிங்கைப் பாராட்டினுன். சிரோப் பூலோகத் நிலேயில்லை! சந்தோஷத்தால் தேவலோகத்துக்கே போய் விட்டான்போல இருந்தான்!

இப்படியிருக்கையில், தேசிங்கு அங்கே குதிரைமேல் இமைக்குமுன் ஏறியுட்கார்ந்து விட்டான். வீரர்களோ குதிரையை விட்டு விட்டனர். அவ்வளவுதான்! விண்ணெனப் பாணம் செல்வதுபோல் பாய்ந்து ஓடியது குதிரை.

தேசிங்கு அதனுடைய கடிவாளத்தை இறுகப் பற்றிக்கொண்டான். அதன் போக்குப்படி யெல்லாம் விட்டான். அதுபலவாறு ஓடிக்களைத்துவிட்டது. அது களைத்த போதிலும், அதன்மேல் இருந்தவன் களைக்கவில்லை; குதிரையின்வலி ஓய்வது கண்டான். அவன் கடிவாளத்தைப்பற்றிச் சுண்டினுன். தான், கருதிய திசையெல்லாம் செலுத்தத்தொடங்கினுன். அங்குக் கூடினவர்கள் அதுகண்டு பிரமித்துப் போய்விட்டனர். இவ்வாறு ஒரு மணி நேரம் குதிரையைச் செலுத்தித் தேசிங்கு அதை வசப்படுத்தினுன். பின்பு மெல்ல நடத்திக்கொண்டுவந்து பாதுஷாவின் சமுகத்தில் நிறுத்தினுன். பாதுஷாவிற்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

ஜனங்கள் எல்லோரும் தேசிங்கை வாழ்த்தினர். சிரோப்பிற்குத் தன் கண்களை நம்ப முடியவில்லை. குதிரை அடங்கி நிற்கிறது' அதன்மேல் தேசிங்கு ஆரோகணித்திருக்கிருன். நன்ருகப் பார்த்தான். தேசிங்கு குதிரையை யடக்கி யிருப்பது கனவன்று நனவே என்று தெரிந்ததும்

ஆடினன்; பாடினன்; ஆனந்தக் கடலுள் ஆழ்ந்தே விட்டான். பக்கத்தில் பாதுஷா இருப்பதையும் பார்க்கவில்லை.

பாதுஷா, தேசிங்கைப் பாராட்டினன்; வேண்டிய சிறப்புக்கள் செய்தான். அந்தக் குதிரையையும் தேசிங்கிற்கே கொடுத்தான். அங்குத்தானே, பலருமறிய தேசிங்கிற்கு, "ராஜா" என்ற சிறப்புப் பட்டமும் வழங்கினன். அப்பொழுது பாதுஷாவின் சேனதிபதியாகிய பீம்ஸிங் என்பவன் தன்மகளைத் தேசிங்கிற்குக் கொடுப்பதாகச் சொன்னன்.

பாதுஷா, தன்னுடைய தலைநகரிலேயே திருமணம் செய்விக்க எண்ணங்கொண்டான். சிரோப் சக்ரவர்த்தியின் எண்ணத்துக்கு மாருய் மணம் நடத்த விரும்பவில்லை. செஞ்சிக்கு ஆள் அனுப்பி, ராம்பாய், மகமதுகான் முதலியவர்களை டில்லிக்கு வரவழைத்தான். நல்ல தினத்தில் பீம்ஸிங் தன் மகள் ராணி பாயைந் தேசிங்கிற்கு மணஞ்செய்து கொடுத்தான். திருவிழாப் போலப் தேசிங்கின் திருமணத்தை டில்லியிலுள்ளார் கொண்டாடினர். சில நாள் அங்கே சிரோப் முதலியோர் தங்கியிருந்தனர். பின்பு செஞ்சிக்குத் திரும்பவேண்டும் என்று பாதுஷாவிடம் தெரிவித்தனர்.

பாதுஷா, அவர்களுக்கு ஏராளமான பொன்னும், மணியும், முத்தும், பட்டும் கொடுத்தான். பீம்ஸிங் மிகுந்த ஸ்ரீதனப் பொருள்களைக் கொடுத்தான். சிரோப் சீரும் சிறப்பும் பெற்ற தன் மகனையும் மருமகளையும் அழைத்துக் கொண்டு செஞ்சிக்கு மீண்டான். அங்குள்ளவர் பூரண கும்பங்கள் கொண்டு வரவேற்கச் செஞ்சியிற் புகுந்தான். ஊரவர் தேசிங்கின் விவாஹ மகோற்சவத்தைக் கொண்டாடினர். அன்று முதல் தேசிங்கு, "ராஜா தேசிங்கு" என்று உலகோரால் வழங்கப்பட்டான்.

---

## 4. அரிச்சந்திரன்

நீர் வளமும் நில வளமும் சிறந்த நாடு கோசல நாடு; அதன் தலை நகரம் அயோத்தி. அந்நாட்டை ஆதிகாலந் தொட்டு ஆண்டவர்கள் சூரிய குல வேந்தர்; அவருள் ஒருவன் திரிசங்கு மஹாராஜன். அவன் தன் குல குருவாகிய வசிஷ்ட முனிவருக்கு விருப்பமில்லாத வினைசெய்தபடியால் நீசனானான். ஆயினும் விசுவாமித்திர முனிவரது துணையால் அந்நீச உடலோடே விண்ணில் ஒரு புதிய சுவர்க்கத்துக்கு அதிபனாய் விட்டான். வசிஷ்டர் தாம் பகையாவிடினும், அவரிடத்துப் பகைமை பாராட்டுதல் விசுவாமித்திரருடைய இயல்பு.

அத் திரிசங்கு மஹாராஜாவின் மகன் அரிச்சந்திரன். இவன் சகல குண சம்பன்னன்: சத்தியத்தைத் தன்னுயிரினும் பேணும் தன்மையன்; செங்கோலன்; தன்போல் உலகத்து உயிர்களைத் தாங்கும் தயாபரன். முனிவரடி முடி சூடும் உத்தமன். பகைவர் முடி தன் அடி பணியச் செய்விக்கும் ஆற்றலன். அன்னவன் ஆளுகையில் கோசல நாட்டவர்க்கு ஒரு குறை மட்டும் இருந்தது. அது தானம் கொடுப்பவர்க்கு ஏற்கும் யாசகரில்லாக் குறையேயாம்.

அரிச்சந்திரன் இவ்வண்ணம் ஆண்டுவரும் நாளிலே, அவன் கோயிலில் சில முனிவர்கள் வந்தடைந்தனர். மன்னன், அவர்கள்து வரவறிந்து, எதிரேற்று முகமன் கூறி அவர்களை யுபசரித்து, அளவளாவுவான் ஆயினன். அப்பொழுது அம்முனிவர்கள், 'வேந்தே! நாங்கள் உனக்கு நற்செய்தி கொண்டுவந்தோம். அதனைக் கேள். கன்னோசி நாட்டையாளும் சந்திரநயனை நீ அறிவாயன்றோ! அவனுக்கு ஒரு மகளுண்டு; அவள் பெயர் சந்திரமதி. அவள் அழகினாலும் குணத்தினாலும் தன்னை யொப்பாள் தானேயாகும் தன்மையாள். அவள் உனக்கு இயைந்த கன்னி; அவளை நீ மணந்தால், உன்னை யொப்பார் பிறரில்லை'' என்றனர்.

அம்மொழி கேட்ட மன்னன், "அருந்தவ முனிவர்களே! இவ்வளவும் என்பால் வைத்த அருளால் நீங்கள் உரை செய்தீர்கள். உங்களை யான் பணிந்து வேண்டுவதும் ஒன்று உண்டு. நீங்கள் என்பொருட்டால் சென்று அம் மன்னனைச் சந்திரமதியை எனக்கு மணமுடித்துக் கொடுக்குமாறு சொல்லீரோ? என்றான். முனிவர்களும அதற்கு இணங்கிக் கன்னோசி நாட்டில் உள்ள கன்னமாபுரி நோக்கிப் புறப்பட்டனர்.

அம்முனிவர்கள் வருதலை யறிந்து சந்திரதயராஜன், அவர்களை எதிர்கொண்டான். அவன், "மாதவத்தீர்! நீங்கள் இங்கிருந்து சென்றதும் திரும்பிவிட்ட காரணமென்ன?" என்றான். முனிவர்களும் தாங்கள் வந்த காரணத்தை சொன்னார்கள். அதுகேட்டு, மன்னன், "பெரியோர்களே! சிலகாரணங்கள் உண்மையால் உங்கள் வேண்டுகோளுக்கு இணங்க இயலாதவனாய் இருக்கிறேன். யான் என் மகளுக்கு எங்கள் குலாசாரபடி சுயம்வரம் வைக்கிறேன். அதற்குச் சக்கரவத்தியாகிய அரிச்சந்திரனை வருமாறு சொல்லுங்கள். ஊழிருந்தால் அவனுக்கே அவள் மாலை சூட்டுவாள்" என்றான். முனிவர்கள் அம்மொழி கேட்டு வந்து அயோத்தி மீண்டு சுயம்வரத்துக்குச் செல்லும்படி அரிச்சந்திரனுக்குத் தெரிவித்தார்கள்.

சந்திரதயன் தன் மகள் சந்திரமதிக்குச் சுயம்வரம் என எல்லா மன்னருக்கும் ஓலை போக்கினான். குறித்த நாளுக்கு முன்னரே பல அரசிளங் குமாரும் அங்கு வந்து கூடிவிட்டனர்.

சந்திரமதியை தான் மணக்கலாகும் என்ற எண்ணத்தனாய் அரிச்சந்திரனும் தேர் மீதேறிக் கன்னமாபுரி நோக்கிச் சென்றான். செல்லுமிடத்து இடையே ஒரு பாலைவனம் குறுக்கிட்டது. அதன் மத்தியில் ஒரு காளி கோவிலுண்டு. அங்கு சென்று தன் பரிவாரத்தோடு அரிச்சந்

திரன் சற்று இளைப்பாறத் தங்கினான். தங்கினவன், அக் கோயிலைச் சூழக் கற்களினாலே தேரும், குதிரையும், வில்லும், கணையும், கணைப்புட்டிலும் இருக்கக் கண்டான். கண்டு அவற்றை வியந்து நோக்குகையில் அவை, இவன் விழிக்கு இலக்காகினமையால், பொற்றேரும், பொற் குதிரையும், பொன் வில்லும், பொற் கணையும், பொற்கணைப் புட்டிலுமாகி விட்டன. அவ்வதிசயங்கண்டு மன்னவன் திகைத்து நின்றான்.

அப்பொழுது அவன் கண் முன்னே மாகாளி பிரசன்னமானாள். மன்னன் அவளை அடிதொழுது பணிந்து நிற்ப, அவள், அவனை நோக்கி, "சத்திய சந்தனே! இவை வருணனுக்கு உடைமையான பொருள்கள். முன்னாளில் அவன் தன் உடைமையாகிய இவற்றைக் கல்லுருவாக்கி விட்டு, "இவை எவனுடைய விழிபட்ட அளவிலே பண்டையுரு வெய்துமோ அவனுடைமை யாகுக." என்று சொல்லி என்னிடம் ஒப்படைத்துச் சென்றான். அன்று முதல் இன்றுவரையும் அவை கல்லாகவே கிடந்தன. இன்று உன் விழியருளால் அவை பண்டையுருப் பெற்றன. ஆதலாலே இவை இனி உன்னுடையனவே." என்றருளினாள். மன்னன் மனமிக மகிழ்ந்து அவற்றை ஏற்றுக்கொண்டான்; காடுடைய தேவியைக் கால்மிசை வீழ்ந்து பணிந்து விடை பெற்றுக்கொண்டு கன்னமாபுரியை யடைந்தான்.

சந்திரதய மகாராஜன், அரிச்சந்திரன் வந்ததுகேட்டு முகமன் கூறி எதிர்கொண்டான்.

அரிச்சந்திரனுடைய அழகையும் குணத்தையும் நேரிலேகண்டு மிகமகிழ்ந்த சந்திரதயன், "இவனை மணக்கும் பாக்கியம் என் மகளுக்குண்டானால் அவளே மிகுந்த தவமுடையவள்" என்று எண்ணினான். சுயம்வர நாளோ மறுநாளாகும். ஆதலாலே அங்குக்குழுமியுள்ள அரசிளங்குமாருடைய நாடு, நகர், குலம், பெயர், முதலியன அறிந்து

செல்ல மகளிர் பலர் கூடினூர்கள். அவர்களுள் அரிச்சந்திரனை அடுத்தார்கள் சந்திரமதியின் உயிர்த்தோழிமார். அவர்கள் அரிச்சந்திரனைக் கண்ட அளவிலே, "இவனொருவனே நம் சந்திரமதிக்குக் கணவனுகத் தக்கவன்" என்றெண்ணினூர்கள். அவர்கள் தம் பணி முடித்து மீண்டார்கள்.சந்திரமதியை அவளுடைய உயிர்த் தோழிமார் தனித்துக்கண்டு அரிச்சந்திரனுடைய அழகையும் குணத்தையும் பற்றி வெகுவாகப் பாராட்டி "அவனை நீ மணக்கப்பெற்ருல் உன்னை ஒப்பார் யாருமிலராவர்" என்றனர். தன் உயிர்த்தோழியர் ஒரு மனதாகக் கூறிய சொல்லால் அவள் அரிச்சந்திரனையே தன் கணவனுக வரிப்பதெனத் தீர்மானித்தாள்.

பொழுது விடிந்ததும் மன்னரெல்லோரும் சுயம்வர மண்டபத்துக்குத் தங்களை நன்ருய் அலங்கரித்துச் சென்றிருந்தனர். அரிச்சந்திரனும் சென்றிருந்தானென்று சொல்லவும் வேண்டுமோ ?

அப்பொழுது சந்திரமதியைச் சர்வாபரண பூஷிதையாக்கித் தோழியர் மண்டபத்துக்கு அழைத்து வந்தனர். அரசகுமாரர் ஒவ்வொருவரையும் அவரவர் நாடுநகர் பெயர் முதலியவற்ருல் தெரியப்படுத்தித் தோழியர் செல்வாராய் அரிச்சந்திரனை யடுத்தனர். அப்பொழுது சந்திரமதி தன் காதற் குரியானைக் காணவேண்டும் என்ற ஆசையால் தலை நிமிர்ந்து பார்த்தாள். அஃதே எண்ணத்தோடு அரிச்சந்திரனும் அவளை எறிட்டுப் பார்த்தான். ஒருவரை ஒருவர் நோக்கி நின்ற அளவிலே, அரிச்சந்திரன், "ஈதென்ன அநியாயம்!" என்ருன். அங்குள்ளார் எல்லாரும் திடுக்கிட்டனர்.

அரிச்சந்திரன் மொழிந்தது கேட்டு, "எ ராஜனே! நீர் சொல்வது எமக்கு இன்னதென விளங்கவில்லை. இங்கு என்ன அநியாயம் நடந்துவிட்டது?" என்று சந்திரதயன்

கேட்டான். "என்ன அநியாயம் என்று கேட்கின்றீர்? நன்று! நன்று!! உம்முடைய மகள் கழுத்திலே தாலி யிருப்பது உமக்குப் புலப்படவில்லையா? முன்னரே மண மான ஒரு பெண்ணைக் கன்னியெனக் கூறி உலகறிய மறு முறை மணம் நடத்தத் துணிந்தீரே! இதைக் காட்டிலும் அநியாயம் வேறென்னதான் வேண்டும்?" என்று அரிச் சந்திரன் மிகுந்த கோபத்தோடு மொழிந்தான்.

அம்மொழி கேட்ட சந்திரதயனுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவேது? என்றாலும் தன் மகிழ்ச்சியை வெளிக்காட்டாமல், அரிச்சந்திரன் சொல்லால் கோப மூண்டவனைப்போல் அபிநயித்து, "ஓ மன்னர்களே! இவர் சற்றும் கூசாமல் கூறுகிற பழிமொழியைக் கேட்டீர்களா? இவர் சொல்லுவது உண்மையா? நீங்களே கண்டு உரைப் பீராக" என்றான். எனவும் அங்குள்ளார் அனைவரும் ஒரே சொல்லாக 'இவள் கழுத்தில் தாலி யிருக்கக்காணோம்; அரிச்சந்திர மகாராஜா! நீர் சொல்வது எங்களுக்குப் புதுமையாயிருக்கிறது" என்றனர். அரிச்சந்திரனோ 'நான் என்றும் சத்திய விரதன்; பொய்மொழி கூறுபவன் யானோ? உள்ளபடியே இவள் கழுத்தில் தாலியை யான் காண்கின்றேன்; நீங்கள் காண்கிறீரில்லை. இதில் ஏதோ விசேஷம் இருக்கவேண்டும்; ஆதலால் இதன் விவரத்தைச் சந்திரதய மகாராஜாதான் சொல்லித் தேற்றவேண்டும்' என்றான். எல்லோரும் 'இது நியாயமானதே' என்றனர்.

"மன்னர்களே! எனக்கு இந்தச் சந்திரமதி ஒருத்தி தான் பெண்; என்னுடைய தவவிரதத்தை மகிழ்ந்தருளிய சிவபெருமான் திருவருளால் இவள் பிறந்தவள்; இவள் பிறக்கும்பொழுதே இவளுடன் அத்தாலியும்தோன்றியது. அதனை யானுங் கண்டிலேன். என் மகள் கண்ணாடி முன் னன்றித் தானும் அறியாள்; தொட்டுஉணரவும் முடியாது. அதனுண்மையை உமாபதியே எனக்கு உரைத்தருளி, இது

இவள் கழுத்திலிருப்பதை எவன் காண்கிருனே அவனே இவளுக்குக் கணவன் என அறிந்துகொள்' என அருளினர். அதன்படி நாமெல்லாம் காணுத தாலியை இவள் கழுத்திலே கண்ட இவ்வரிச்சந்திர மகாராஜாவே இவளுக்குக் கணவராதல் வேண்டும்" என்று கூறித் தன் மகளை நோக்கினன். அவளோ, "நான் தோஷம் ஒன்றும் இல்லாதவளானல் இம்மாலை அவர் கழுத்தில் விழுக" எனச் சுழற்றி எறிந்தாள். அம்மாலை அரிச்சந்திரன் மார்பிலே வந்து வீழ்ந்தது. கற்பின் பெருமையே பெருமை! அது கண்டு எல்லோரும் சந்தோஷ முற்றவராய் அவ்விருவரையும் ஆசிர்வதித்தனர். அதன் பின்னர் சந்திரதயன், தன் மகளை அரிச்சந்திர மகாராஜனுக்கு விதிப்படி மணஞ் செய்து கொடுத்தான். அரிச்சந்திரன் சின்னுள் கன்னபுரியிலேயிருந்து இன்புற்று வாழ்ந்து பின், அயோத்தி நகருக்கு மனைவியோடும் போய்ச் சேர்ந்தான். அவனுக்குத் தேவதாசன் என்ற மகன் பிறந்தான்.

இங்கு இவ்வண்ணமாகத் தேவலோகத்திலே இந்திரன் ஒரு மாபெரும் சபை கூட்டினன். அச்சபையிலே வசிஷ்டாதி மகர்ஷிகளும் விசுவாமித்திரர் முதலியோர்களும் இருந்தனர். அவர்களை நோக்கி இந்திரன், "பெரியோர்களே! நீங்கள் அறிந்தமட்டும் இப்பூவுலகிலே சத்தியநெறி தவருதவர் யார்? உலகத்திலே எப்படிப்பட்ட கஷ்டம் வந்தகாலத்தும் தர்மத்தைத் தாங்கி நிற்கும் உத்தம ஒழுக்கத்தவருமுண்டோ?" என்ருன். அவன் மொழிகேட்டு, அச்சபையோரில் ஒருவரான வசிட்ட முனிவர், "அமரர் கோனே! பூவுலகிலே ஒருவன் அத்தன்மையன் உளன். அவன் யார் எனின் அவன் என் சிஷ்யனுன அரிச்சந்திரனே; அவன்பரதாரசகோதரன்; போர்வீரன்; புகழ்க்கும், கல்விக்கும் தர்மநெறிக்கும் ஆதாரபூதன்; அவனை ஒப்பார் பிறரில்லை" என்ருர்.

என்றதும் அவரிடம் பகைமை பாராட்டும் இயல்புடைய விசுவாமித்திரருக்கு அதுபொறுக்கவில்லை.உடனே எழுந்தார். ' ஓ வசிட்ட முனிவரே! உமக்கு இது தகுமா ? உம்முடைய சிஷ்யன் என்ற அபிமானத்தால் நீர் இந்த ஐயன் திருச்சபையிலே அவனைப்புகழ்வது சிறிதும் தகாது. ஏனென்றால் அவன் பிறர் மனைவியை விரும்பும் பேதை ; மகாகோபி; படுமோசக்காரன்; அவன் சொல்வதெல்லாம் பொய்தான் ; கபடமாய் உத்தமன் போல் நடிப்பவன் ; இன்னும் மக்களுக்குக் கூடாது என்று விளக்கப்பட்டதீக் குணங்கள் அவனுக்குச் செல்வப் பொருள் போன்றன. நீர் இங்குப் பலவாறு புகழ்ந்தது அவனுக்கு ஆசானாகிய தனாலோ ?" என்று இகழ்ந்தார்.

"சிவ ! சிவா !! "எனத் தம் இரு செவியும் பொத்தி, மிகவும் மூண்டெழுந்த கோபத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு. "கௌசிகரே ! என்ன வார்த்தை சொன்னீர் ? ஒரு குற்றமுமில்லாத உத்தமனை நீர் இகழ்ந்தீர் ; உம்முடைய நாக்கு அந்தப் பாபத்தின் பயனாக இன்னும் வேகாமலிருக்கிறது!தெய்வம் பொய்த்துவிட்டது போலும்? என்று வசிட்டர் நொந்து கூறினார். கூறவே, விசுவாமித்திரர், "ஓ வசிட்டரே! என் வாய் வேகாமையே என் சொல்உண்மையெனக் காட்டிவிட்டது ! பார்த்தீரா ? ஆதலாலே உம்முடைய சொல்லுத்தான் பொய்யானது. இந்தச் சபையோர் முன் பொய் சொன்ன உம்முடைய வாய்தான் அந்தப் பாபத்தின் பயனாக வெந்துபோம் என்று அறியும்"என்றார்.

வசிட்டருக்குக் கோபம் தாளமுடியவில்லை. கொதித்த மனத்தோடு எழுந்தார். விசுவாமித்திரரும் பின் வாங்கினாரில்லை. பார்த்தான் இந்திரன் ; இது என்ன கேட்டை விளைவிக்குமோ' என்று அஞ்சினவனாய், அவ்விருவரையும் சமாதானம் செய்தான். செய்து, "இப்படி நீங்கள் சண்டையிட்டுப் பயனென்ன ? உங்கள் சொல்லின் மெய்மையைக்

காட்டுங்கள். தோற்றுர் இன்னது செய்யக் கடவர் என்று ஒரு பந்தயம் வைத்துக்கொள்ளுங்கள்; அப்படியன்றி நீங்கள் வீணே வாய் வார்த்தை செலவிட்டு மனநோவதேன்?' என்ருன்.

எனலும் வசிட்டர், " அரிச்சந்திரனைப் பொய்யன் என்று இந்த விசுவாமித்திரர் நிரூபித்து விடுவாராயின், யான் தவத்தை விட்டிடுகின்றேன் ; இறந்தவர் ஓட்டைக் கைக் கொள்கின்றேன் அதுகொண்டு புலையர்தம் இல்லத்தில் அவருண்ட எச்சிலை ஏற்றுண்டு வாழ்ந்து, மறுமையில் பாழ் நரகிடை வீழக்கடவேன்" என்று ஒரு மகாகொடிய சபதம் செய்தார்.

விசுவாமித்திரர் பார்த்தார்; "ஏதேது ! வசிட்டர் இந்த மகா சபதம் செய்ய வேண்டுமானல் அரிச்சந்திரன் எவ்வளவு உத்தமனு யிருக்கவேண்டும்! நாம் இவருடன் பகைத்துப் பாவத்தைத் தேடிக்கொண்டோமே" என்று மனம் கலங்கினர். பின்னர் ஒருவாறு தேறித் தேவேந்திரனைப் பார்த்து, "நான் இம்மாதிரியான கொடிய சபதம் செய்யேன்; ஆனல் வசிட்டர் கூறியதுபோல் அவன் உத்தமனுயின் என் தவத்தில் பாதியை அவனுக்கே கொடுப்பேன்; ஆனல் இங்கு நடந்தன ஒன்றும் அவன் செவிக்கு எட்டலாகாது" என்று கூறினர். அவர் மொழியை எல்லோரும் அங்கீகரித்தனர். வசிட்டாதிப் பெரியோர் விண்ணிலே நின்றுவிட்டனர். கோசிகர் மட்டும், விண்ணின்றும் மண்ணுலகம் வந்து தமது சித்தாச்சிரமத்தை யடைந்தார்.

சித்தாச்சிரம வாசிகளான முனிவர்கள் விசுவாமித்திரரைப் பார்த்து, "சுவாமி! தேவலோகத்துக்குச் சென்றிருந்தீர்களே; அங்கிருந்து இங்கு ஒருவரும் எதிர்பாராதபடி திரும்பியதென்ன? என்றனர். அவர்களுக்கு, "தேவர்கள் தலைவனன இந்திரன் என்னை ஒரு பெரிய யாகம் செய்யும்

படி வேண்டினன். அவன் வேண்டியவாறே அவ்யாகம் முடித்தற்கு இங்கு வந்தேன்'' என மறுமொழி தந்து ''யான் செய்யலாவது ஒரு மகத்தான யாகம்! ஆதலால் அதற்கு வேண்டிய பொருளை, இந்நகரையாளும் அரிச்சந்திர மஹாராஜாவிடம்போய் யான் கேட்டதாகச் சொல்லி அவன் விடையறிந்து வாருங்கள்'' என்று கோசிக முனிவர் கூறினர். அவர் மொழிப்படியே அம்முனிவர்கள் அரிச்சந்திரனை யடுத்தனர்.

தன்னை யடுத்த முனிவர்களை மன்னன் வரவேற்றான். அவர்களுக்குச் செய்ய வேண்டுவன உபசாரங்கள் எல்லாம் செய்தான். பின்பு அவர்களைப் பார்த்து, ''தவச்சிரேட்டர்களே! நீங்கள் வந்ததால் யான் மிகுந்த புண்ணியவான் ஆனேன். உங்களுக்கு என்னலாக வேண்டியது ஏதேனும் உண்டானல் அதைத் தெரிவிக்க வேண்டும். உங்களுக்கு உதவும் பாக்கியத்திலும் சிறந்த பாக்கியமுண்டோ?'' என்றனன்.

அவன் மொழி கேட்ட முனிவர்கள், ''ஏ மகாராஜனே! விசுவாமித்திர மகாமுனிவர் பெருவேள்வி ஒன்று தேவர்கோன் விருப்பிற் கிணங்கிச் செய்ய நேர்ந்திருக்கிறார். அவர் அதை முட்டின்றி முடிக்கப் பொருளுதவியை உம்மிடம் வேண்டுவதாச் சொல்லச் சொன்னர். உம்முடைய விடையை எதிர்பாக்கிறோம்'' என்றனர்.

''நானே மிகுந்த பாக்கியசாலி; விசுவாமித்திர முனிவருக்கு உதவும்படியான சந்தர்ப்பம் வாய்த்ததை நினைக்கவே என் மனம் மகிழ்ச்சி யடைகின்றது. யான் என்றும் உதவக் காத்துக் கொண்டிருக்கிறேன். பெரியோர்களே! எவ்வளவு பொன்னை என்னிடத்தில் அவர் எதிர்பார்க்கிறாரோ அவ்வளவு யான் கொடுக்கச் சித்தனயுளேன்'' என்றான். முனிவர்கள் அம்மொழி கேட்டு, மகிழ்ந்து,

அவனை ஆசிர்வதித்துச் சென்றனர். விசுவாமித்திரர், அம் முனிவர்களால் அரிச்சந்திரனுடைய வாக்குறுதியைப் பெற்றுக் கொண்டார்.

வாக்குறுதி பெற்ற அளவிலே அம்முனிவருக்கு விபரீத யோசனை தோன்றியது. அதனால், அவர் தமது தவத்தின் வலியால், பல கொடிய மிருகங்களைப் படைத்து, அவைகளைக் கோசல நாட்டிலேயுள்ள பயிர் பச்சைகளை யழிக்கு மாறு ஏவினர். மிருகங்கள் கொடிய துன்பம் விளைவித்தன. மக்கள் வருந்தலாயினர்.

குடிகள் மன்னனைக்கண்டு தங்கள் துன்பத்தை முறையிட்டுக் கொண்டனர். அவர்களுக்கு ஆறுதல் கூறி அரிச்சந்திர மஹாராஜன் வேட்டை மேற்சென்றான். வேட்டையிலே அவன் துஷ்ட மிருகங்கள் பலவும் கொன்றொழித்தான்.

அவனாலே தாம் ஏவிய விலங்குகள் எல்லாம் இறந்துபடுதலை விசுவாமித்திரர் அறிந்தார்; மகா கோபங்கொண்டார். தம் தவவலியாலே, ஒரு கொடிய பன்றியைச் சிருட்டித்து ஏவினர். அப்பன்றி சென்று மன்னன் சேனையைத் தாக்கியது. சேனையிலே பெருவாரியான சேத முண்டாயிற்று. மன்னன் இப்பன்றியைக் கண்டான்; கையிலே வில்லை எடுத்து பாணத்தைத் தொடுத்தான்; விடுத்தான்: விடுத்து அதனை வதைத்தான். பின்பு தன் பரிவாரங்கள் சூழ்ந்துவரத் தான் வேட்டையாடிய வருத்தந் தீரச் சமீபத்திலுள்ள ஒரு பூஞ்சோலையைச் சென்றடைந்தான்.

அச்சோலையின் ஒரு புறத்தே விசுவாமித்திரர் தங்கியிருந்தார். அவர் மன்னன் வந்திருப்பதை யறிந்துக்கொண்டார். தம்தவவலியாலே இரண்டு புலைப்பெண்களைப் படைத்தார். அவர்களை நோக்கி, "என் அருமைமக்காள்! நீங்கள் இச்சோலையின் மறுபுறத்தே தங்கியிருக்கும் அரிச்சந்திர மஹாராஜனிடம் செல்லுங்கள், சென்று அவன் முன்

ஆடிப்பாடுங்கள்; பாடிப் பரிசிலாக அவனது தொல்குடிக் குரிய வெண்கொற்றக் குடையைக் கேளுங்கள்; அவன் அது கொடுக்க மறுத்தானேயாகில், உங்களை அவன் மணந்து கொள்ளும்படி வேண்டுங்கள். வேறு எப்பரிசு தந்தாலும் ஏற்றுக்கொள்ளாமல் இங்கு வந்துவிடுங்கள்: பின்பு யான்வேண்டுவனற்றைச் செய்துகொள்கிறேன்' என்று கட்டளையிட்டு அனுப்பினர்.

அப்புலைப் பெண்களும் மன்னன் திருமுன்பு கையிலே யாழ்கொண்டு பாடியாடி வந்தனர். இளைப்பாறியிருந்த மன்னனுக்கு அப்பெண்களுடைய திவ்ய கானம் செவிக்கு அமுதென இருந்தமையாலே, அவன் அவர் பாடலைக் கேட்டு மகிழ்ந்தான். மகிழ்ந்தவன் அப்பெண்களுக் குத் தன் மார்பிலுள்ள முத்துமாலை முதலிய உயர்ந்த பொற்கலன்களைப் பரிசாக வழங்கினன். அப்பரிசில்களை அம்மங்கையர் ஏற்க மறுத்தனர். அரசன் அவர் செயல் கண்டு வியப்புற்று, நீங்கள் வேறு எப்பரிசிலைவிரும்பு கின்றீரோ? கூறுமின்; இயையுமாயின் தருகிறேன், என் றுன். மன்னனுடைய மொழி கேட்டு அம்மங்கையர், 'வேந்தர் வேந்தே! யாங்கள் விரும்பும் பரிசில் உமது தொல்குடிக்குரிய வெண்கொற்றக் குடையே' என்றனர். மன்னன் அது கேட்டு, 'நங்கைமீர்! அது என்னுல்கொடுக்க லாவதோர் பரிசிற்பொருளன்று; ஆதலின் வேறுபலகுடை கள் உள்ளனவற்றுள் உங்களுக்கு விருப்பமானது கொள் ளுங்கோள்' என்றுன். அம்மடந்தையர், 'அப்படியாயின், மன்னர் மன்னு! நீர் எம்மை மணந்துகொள்ளும்; இதுவே எமக்கு விருப்பமானது. என்றனர். அவர் மொழி கேட்டு மன்ன ன்நகைத்து, 'நங்கைமீர்! நானோ அரசகுலத்தினன். நீங்களோ புலைக்குலத்தீர். அன்றியும் எனக்கு முன்னரே மணமும் முடிந்திருக்கிறது; ஆதலின் உங்களையான் மணப் பேன் என்று எதிர்பார்ப்பது சிறிதும் தகாது. வேறு பரிசிற் பொருள் ஏதேனும் கேட்டு வாங்கிக்கொண்டு

செல்வதே தக்கது என உணருங்கோள்" என்றனன். அப்பெண்கள் அவன் மொழியைச் செவியில் ஏலாமலே அவனை நெருங்கத் தலைப்பட்டனர். அவர் செயல் கண்டு அரசனது பணியாளர் அப்பெண்களை அப்பாற் படுத்திப் புடைத் தனுப்பினர். அம்மகளிரும் முனிவரிடம் நிகழ்ந்தது கூறினர்.

முனிவர் தம் மக்கள் பட்ட அவமானத்தால் கோபமுண்டவராய் மன்னனிடம் வந்தார். முனிவரை இறையவன் அடிவணங்கினன். அவர் தமது காலால் அவன் முடியிலுதைத்தனர். அப்பொழுது அம்முனிவருடைய பாத கமலங்களைப் பிடித்துக் கொண்டவனாய், மன்னவன், "சுவாமி உங்கள் திருவடி சிவக்குமே;" எனச் சொல்லி அவ்வடிகளை வருடினன். முனிவர் கோபத்தோடு, "உன் பாசாங்கெல்லாம் யான் அறிவேன். அரிச்சந்திரா! என் மக்களை ஏன் அவமானஞ் செய்தனுப்பினாய்?" என்றார். "சுவாமி! உம்முடைய மக்களை யான் அவமதித்தேனா? நீங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை; சற்றே தெரியச் சொல்லவேண்டும்" என்று மன்னன் மொழிந்தான.

விசுவா :—இங்கு வந்து பாடிப் பரிசில் பெற வந்தோர் என் மக்கள் ; அவரை நீ அவமதித்தனுப்பவில்லையா ?

அரி :—சுவாமி ! அவர்களை உம் மக்கள் என யான் அறியேன். யான் அவர்களை அவமானஞ் செய்திலேன்.

விசுவா :—நீ அவர்கட்குப் பரிசில் வழங்கவில்லை. அது தானே அவர்களை இகழ்ந்ததற்குப் போதாதோ ?

அரி :—சுவாமி ! அவர்கள் பரிசிலாக வேண்டியன யாவை என நீங்கள் அறிந்தால் இவ்வண்ணம் கோபிக்க மாட்டீர்கள் என்பது என் துணிபு. என் தொல்குடிக் குரிய கொற்றக் குடையை முதலிற் கேட்டார்கள் ; பின்னர் என்னைத் தங்களை மணக்கும்படி இரண்டாவதாகக்

கேட்டார்கள்; இவை என்னால் செய்யத் தகுவனவோ? நீங்களே சொல்ல வேண்டும். யான் என் அரசை அவர்கள் கேட்டாலும் தருவேன். மற்று அவர்கள் கேட்ட அவ்விரண்டையும் எப்படித் தரவல்லேன்?

விசுவா:—அப்படியா! உன் அரசை வேண்டினும் தருவையோ?

அரிச்:—சுவாமி! சிறிதேனும் தயங்காமல் தருவேன்.

விசுவா:—ஆயின் எனக்கு உன் அரசைக் கொடு.

அரிச்:—சுவாமி! மிகவும் சந்தோஷம். இனி என் அரசு உமதே. கொடுத்தேன்.

விசுவா:—தாரை வார்த்துத் தரவேண்டும், அரிச்சந்திரா!

அரிச்சந்திரன் அவர் விரும்பியவாறே தன் ராஜ்யத்தைத் தாரைவார்த்து அவருக்குத் தத்தம் செய்து விட்டான். விசுவாமித்திரர் அரிச்சந்திரனை நோக்கி, "அரசே! நாட்டுக்கு வந்து நீயே எனக்கு முடிசூட்டி, உன் நாட்டவர்க்கு யான் அரசன் எனத் தெரிவிக்க வேண்டும்" என்றார். அவனும் அவ்வாறே செய்தான். குடிகளுற்ற வருத்தத்துக்கு ஓரளவில்லை.

அரசை ஏற்றதும், முனிவர், மன்னனை நோக்கி, "இனி இது என் நாடு; நீ இங்கிருந்தால் குடிகள் உன்னைக் காணக்காண அன்பு அதிகரிக்கப் பெற்று என்னைத் தாக்கியழிக்கத் தலைப்படுவர். ஆதலால் இந்நாட்டை விட்டு நீ வெளியேறி விடவேண்டும்" என்றார். அம்மன்னனும், தன் மனைவியையும், பாலனையும் உடன்கொண்டு வீதி வழியே காலால் நடந்து, நகரைக்கடந்து சரயு என்னும் நதியைத் தாண்டி அக்கரையிலுள்ள ஒரு சோலையில் தங்கினான். அவனோடு அமைச்சரும் சிற்றரசரும் குடிகளும் சென்றிருந்தனர். முனிவரும் அங்கு ஒரு மறைவிடத்தே வந்திருந்தார்.

அமைச்சர் முதலாயினோர், "அரசே! இன்று நாடு நீங்கிச் சென்றால், நீங்கள் என்று இங்கு திரும்புவீரோ? அறிகிலோமே" என்றார். "முனிவருக்குக் கொடுத்த மூதூரில் யான் இனி என்றும் திரும்பேன்" என்று மன்னன் மொழிந்தான். மொழிந்ததோ "அம் முனிவரை என்னை நேசித்தாற் போல நேசித்து நீங்கள் வாழ்ந்தால் அதுதான் எனக்கு பேரின்பத்தைத் தரும்; ஆதலால் இங்கு வந்துள்ள நீங்கள் எல்லோரும் நாடு சென்று முனிவரின் ஆணைவழி ஒழுகுங்கள்" என்று கண்டிப்பாகக் கூறினன். அமைச்சராகியோர் அச் சொல்லை, மறுக்க அஞ்சிப் பிரியாவிடை கொண்டு அகன்றனர்.

அப்பொழுது முனிவர் அரசன்முன் தோன்றினர். அவரை அவன் அடிபணிந்தான். அவர் அவனை நோக்கி, "யான் வேள்வி முடிக்க நீ தருவதாகச் சொல்லிய பொன்னைத் தருவயோ! தாராயோ! என்றார். அரிச்சந்திரனுக்கு முனிவருடைய சூழ்ச்சி விளங்கிவிட்டது. "சுவாமி உமக்கு யான் கொடுத்த அரசோடு, முன் தருவேன் என்ற பொன்னும் சேர்ந்துவிட்டது; ஆகையாலே நீர் அப் பொன்னை என்னிடம் இப்பொழுது வேறாகக் கேட்கின்றீர். யான் சொன்ன மொழி தவறேன்; யானோ இப்பொழுது வறியன்; என்றாலும் ஒரு குறிப்பிட்ட காலத்துள்ளாக அப் பொருளை உமக்குக் கொடுக்கிறேன். ஓர் ஆளைமட்டும் தயவுசெய்து அனுப்பிவையுங்கள்" என மன்னன் கூறினன். முனிவரும் வேறு வழியின்றி இணங்கி நாற்பத்தெட்டுநாள் தவணை கொடுத்தார். அதுவுமன்றித் தீங்கே செய்யவல்ல சுக்கிரனை அழைத்து, "நீ இவன்பின் செல்; ஆனைமேல் இருந்து ஓராடவன் எறியும் கைக் கவண்கல்போல் அளவு பொன் தருவானேல் கொள்ளு; அதனிற் குறைந்தாற் கொள்ளாதே; அன்றியும் நீ பின்னே சென்ற கூலியும் பெற்றுக்கொள்" என்று மொழிந்தார். மொழிந்து அச் சுக்கிரனைத் தனியே

அழைத்து, "சுக்கிரா! இந்த அரிச்சந்திரனை எப்படி யாவது, பொய் சொல்ல வைக்கவேண்டியதே என் விருப்பம். அதனாலே இவனைப் பலவகையிலும் துன்புறுத்து" என்று சொல்லியனுப்பினார். அரிச்சந்திரன், தன் மனைவியும் மகனும் பின்தொடரச் சுக்கிரனோடு காசி நோக்கிச் சென்றனன். சத்தியகீர்த்தி என்னும் மந்திரிமட்டும் மன்னனைப் பிரியானாய் உடன் சென்றான். செல்லுகையில், வழியிலே விசுவாமித்திரர் சூழ்ச்சியாலும், சுக்கிரனாலும் அவர்கள் பலப்பல வகையான துன்பங்களை யடைந்தனர் எல்லாம் ஈசன் செயல் என்று பாரத்தைக் கடவுள் மேலிட்டு, அவர்கள் ஒருவாறு காசியை யடைந்தனர்.

காசியிலே தவணை நாட்கள் கழிவதற்கு முன்தினத்திலே சுக்கிரன் படுத்திய பாடு மன்னனால் சகிக்க முடியவில்லை. கண்ணீர் விட்டுக் கலங்கி நின்றான். அதுகண்ட அவன் மனைவி சந்திரமதி, "நாதா! நீங்கள் கவலைப்படுவதேன்? யானும், மகனும் உம்முடைய செல்வப் பொருளல்லவோ? எங்களை விற்றுப் பொருளாக்கிக் கொடுக்கலாம்" என்றாள். மன்னனும் இசைந்து அவர்கள் தலையில் ஒரு தருப்பை வைத்துக் காசியிலே வீதிகளில் விலைகூறி நடந்தான். அங்கொரு பிராமணன் அதிக வேகத்தோடு வந்தான். அவன் பெயர் காலகண்டையன். அவன் மன்னன் சொல்லைக் கேட்டுத் தான் சந்திரமதியையும் அவள் மகனையும் விலைக்குக் கொண்டான். சுக்கிரன் பொருளைத் தான் பெற்றுக்கொண்டதாக மன்னனிடம் ஒப்புக்கொண்டான். சந்திரமதியும் மகனும் தம்மை வாங்கிய அப் பிராமணன் பின் சென்றனர். அவர்கள் சென்றபின் மன்னனைச் சுக்கிரன் நோக்கி, "எனக்குக் கூலி" என்றான். "உனக்கும் தருகிறேன், வா" எனக் கூறி அரிச்சந்திரன், மந்திரியால் தன்னை வீரபாகு என்னும் புலையனுக்கு விற்றுச் சுக்கிரனுக்குப் பொருள் கொடுத்தனுப்பினான்.

காலகண்டையன் வீட்டிலே சந்திரமதி தான் முன்பு செய்தறியாத பல வேலைகளையும் செய்து அவதிப்படுவாளாயினள்; அவள் மகன் தேவதாசனோ இளங்குமாரன், சுகவாழ்விலே மூழ்கிக்கிடந்தவன்; அவன் இழிந்த பல வேலைகளைச் செய்யவும் காலம் நேர்ந்துவிட்டது. இவர்கள் கதி இதுவாகப் புலையனுக்கு அடிமைப்பட்ட அரிச்சந்திர மஹாராஜனோ சுடுகாட்டிலே பிணங்காக்கும் தொழிலையுடையனானன். செங்கோலேந்தி நாடுகாத்த மன்னன், வெறுங்கோலேந்தி சுடுகாடு காப்பதானன்; என்றால் விதியின் கொடுமை யிருந்த படியை என்னென்பது?

இங்ஙனமிருக்கும் நாளில் ஒரு நாள், காலகண்டையனுடைய கர்மானுஷ்டானத்திற்காகத் தேவதாஸன் அயல் வீட்டுப் பிள்ளைகளோடு தருப்பைப் புல்லுப் பறிக்கச் சென்றான். அங்கு விசுவாமித்திரர் சூழ்ச்சியாலே ஒரு பாம்பு கடிக்க அவன் இறந்துவிட்டான். அச்செய்தியைச் சந்திரமதிக்கு அயல்வீட்டு மக்கள் சொல்லிப் புலம்பினார்கள். அவள் பட்ட துன்பத்தை யாரால் அளவிட்டுச் சொல்ல முடியும்?

அவள் தன்னை ஒருவாறு தேற்றிக்கொண்டு, அந்தணனிடம் தன் மகனை எரித்துவர உத்தரவு தருமாறு வேண்டினாள். அவன் முதலில் இணங்கவில்லை. பின்னர் உலகிற்குப் பயந்து விடைதந்தான். அதிசீக்கிரமாய்த் திரும்பவேண்டுமென்று பணித்தான். அவனது விடை பெற்றுக்கொண்டு இருண்டபோதிலே மருண்டகாட்டிலே தனித்துச்சென்று அவள் தன்மகன்கிடந்த இடத்தை யடைந்தாள். மகன் மேல் விழுந்தாள், அழுதாள், புரண்டாள், பலவுஞ் சொல்லிப் புலம்பினாள். என்ன பயனுண்டாம், இறந்தவர் மீள்வரோ?

ஒருவாறு தேறி அவ்வுடலைத் தன் தோள்மேலே தாங்கி எடுத்துக்கொண்டு சுடுகாட்டை அவள் அடைந்

தாள். அடையுமுன் அவள் பட்ட துன்பம் எவ்வள வென்பது?

சுடுகாட்டிலே மகனுடன் வந்து சேர்ந்தாள். அங்குள்ள எரிந்த கொள்ளிகளைக் காஷ்டமாக அடுக்கினாள். அதன் மேலே மகனுடைய சவத்தை வைத்தாள், தீயை மூட்டினாள். அவ்வளவுதான்! கண்டான் அரிச்சந்திரன். தன் காவற்கூடத்தினின்றும் ஓட்டமாய் ஓடிவந்தான். பிணத்தைக் காலால் எற்றினான். "ஐயோ!" என்று அலறினாள் சந்திரமதி; அலறுவாளைப் பார்த்துப் "பெண்ணே யாருமில்லாத காடு இது; பொழுதோ நடுநிசி, இங்குத் தனியளாய் வந்து பிணத்தைச் சுடுகின்றாய். காவற் பணங் கொடுக்கவேண்டாமோ? என் திருட்டுத் தனமான செயல் புரிகின்றாய்?" என்றான்.

சந்திரமதி :—காவற் பணமா? அது வென்ன? ஐயா!

அரிச்சந் :—இங்கே பிணஞ்சுடுவார் காற்பணமும், முழத்துண்டும், ஒரு படி அரிசியும் தந்த பின்னர்தான் சுடுதலாகும். அவை என் எஜமானருக்குச் சேரவேண்டும். அதற்காகவே என்னை அவர் இங்குக் காவல் வைத்திருக்கிறார். அப்பொருளைத் தராவிட்டால் நீ இப்பிணத்தைச் சுட விடமாட்டேன்.

சந்திரமதி :—ஐயனே! நானோ பரம ஏழை. எனக்கோ இவ்வொருமகன்தானுண்டு. இவனும் அகாலத்திலே பாம்பு கடித்து இறந்துவிட்டான். என் எஜமானனிடம் யான் அரிதினில் விடைபெற்று இதைச் சுடவந்தேன். இங்கு நீர் தடை செய்கின்றீர். நான் என்னதான் செய்வேன்? ஏழைப் பெண்ணிடம் சாலத் தயவு செய்யலாகாதா?

அரிச்சந் :—நீ ஏழைப் பெண்ணென்று சொன்னால் நான் அதை நம்பமாட்டேன்; உன் கழுத்திலேயுள்ள பொற்றாலி ஒன்று போதுமே!

சந்திரமதி, "ஆ தெய்வமே" என்று மூர்ச்சையுற்ருள். அரிச்சந்திரன் திடுக்கிட்டான் தன் கையிலுள்ள துணியாலே மெல்ல விசிறினன். அவளும் சிறிது பொழுது சென்று கண் விழித்தாள். விழித்தவள் துயரம் பொறுக்க மாட்டாமல், "ஒ தெய்வமே! என் கழுத்தில் உள்ள தாலியைப் புலையனும் காண நேர்ந்ததே! எங்கள் அரிச்சந்திர மகாராஜா எங்களை விற்றமையால் எங்கள் குலப்பெருமை போகலாம்; என் கற்பும் போகலாமோ?" என்று புலம்பத் தொடங்கினள்.

"சந்திரமதி! தேவதாஸா!" என விழுந்து மூர்ச்சையுற்ருன் மன்னன்; சந்திரமதி திடுக்கிட்டாள்; கீழே விழுந்தவனை நோக்கினள்; இருட்டு! ஒன்றும் நன்ருய்த் தெரியவில்லை. ஐயமுற்ருள்; அப்பொழுது மூர்ச்சையுற்ற மன்னன் தெளிந்து எழுந்து மகனுடலை எடுத்துத் தன் மடியிலே கிடத்திப் பலவாறு புலம்பினன். சந்திரமதிக்கு அப்புலையன் தன் கணவனை அரிச்சந்திரனே என்று தெரிந்துவிட்டது. "நாதா!" என்று அவனடியில் வீழ்ந்து புலம்பினள். அரிச்சந்திரன் அவளை ஒருவாறு தேற்றித் தானும் தேறி மேல் நடக்க வேண்டியதை நினைத்தான்; அதனலே அவளை நோக்கி, "இனி அழுது பயனில்லை; நீ காவற்பணம் கொடாமல் பிணஞ் சுடுதல் கூடாது. வேண்டுமானல் என் பாகமாகிற அந்த ஒரு படி அரிசி வேண்டுவதில்லை; ஆனல் காற்பணமும் முழத்துண்டும் கொடாமல் தீராது; ஆகையாலே நீ ஊருட்சென்று யாசித்தாவது அப்பொருள் கொண்டுவா; பின்னர் மகனைச் சுடலாம்" என்ருன். வேறு வழியில்லாமல் அவள் ஊர் நோக்கிச் சென்ருள்.

செல்பவள் நடுவழியிலே ஒரு பாலகனுடைய பிணத்தைக் கண்டாள். தன் மகன் சவத்தைத் தான் நரிகள் இழுத்துக்கொணர்ந்து போட்டனவோ என ஐயுற்று அதன் மேல் புலம்பிக்கொண்டிருந்தாள்.

அப்பொழுது காசிராஜனுடைய சேவகர்கள் இவளை வந்து வளைத்துக்கொண்டனர்; சிறை செய்தனர். சவமும் கையுமாக அவளைத் தம் அரசன்முன் நிறுத்தினர்; நிறுத்தி, "மகாராஜா! இந்த துஷ்டப் பெண்தான் ஆபரணங்கள் பொருட்டால் நம் இளவரசரைக் கொன்றவள்; நாங்கள் வருவது தெரிந்ததும், இவள் தன் மகனைப் பறிகொடுத்தவள்போல் பாசாங்கு செய்தழுதாள்; அழுதாலென்ன? குழந்தை நம்ம இளவரசரல்லவோ?" என்றனர். "பெண்ணே! இதற்கு நீ என்ன சொல்கிறாய்?" என்று அரசன் கேட்டான். சந்திரமதி உலகவாழ்வை வெறுத்தமையாலே, "நான்தான் இந்தச் சிறுவனைக் கொன்றேன்" என்றாள். அரசனுக்கு வேறு வழியில்லை. அவளைக் கொல்லும்படி உத்திரவிட்டான்.

கொலைத் தண்டனை பெற்றோரை வீரவாகு என்னும் புலையன் கொல்லவேண்டும்; ஆதலால் சந்திரமதியை அவனிடம் ஏவலாளர் அனுப்பித்தனர். அவன் அவளுடைய முகவிலாசம் அப்பொழுதும் நிஷ்களங்கமாய் இருத்தலைக் கண்டான். காணவே அவளைத் தன் கையால் கொல்ல விரும்பாமல் அரிச்சந்திரனிடம் அழைத்துச் சென்றான். அப்பொழுது அரிச்சந்திரன், "சென்ற நம் மனைவி இன்னும் வந்தாளில்லையே" என்றெண்ண மிட்டிருந்தான். அவன்முன் சந்திரமதியைக்கொண்டு சென்ற வீரபாகு, அவனை நோக்கி, "ஏ அரிச்சந்திரா! இதோ இவளைப் பார்; இவள் நம்ம ராஜா வீட்டுப் பிள்ளையைக் கொன்றுட்டாள். இவளைக் கொல்லும்படி நமக்கு உத்திரவு; அதை உனக்கு நான் தருகிறேன். இவளை வெட்டிக் கொல்லு. இவள் குணவதியாய் இருக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது. ஆதலால் நான் இங்கிருக்க விரும்பவில்லை. சட்டென இவளை வெட்டி எனக்கு அதனைத் தெரிவி" எனச் சொல்லிவிட்டுச் சென்றான்.

அரிச்சந்திரன், "அப்படியே யாகுக" எனத் தன் எஜமானனிடம் ஒப்புக்கொண்டான்; கையிலே வாளை எடுத்தான்; மனைவியை நோக்கினன்; "பெண்ணே உண்மையில் நீ குற்றவாளிதானா?" என்றான். அவன் கேட்டதுதான் அவளுக்கு மிகுந்த வருத்தத்தை யுண்டாக்கியது. "நாதா! நீங்களும் என்னைக் குற்றவாளி எனக் கருதினால் எனக்குக் கொலைத் தண்டனை தக்கதுதானே" என்றாள். அரிச்சந்திரன் கண்களில் தாரைதாரையாய் நீர் வந்துவிட்டது. சிறிது நேரம் அசைவற்று நின்றான்.

பின்னர்த்தேறி "சந்திரமதி! சகல குண சம்பன்னியே! நீ உன் காதற்றெய்வத்தை வணங்கிக்கொள்; அதன்பின் யான் உன்னைக் கொல்கின்றேன்" என்றான் மன்னன்; அவ்வளவிலே, அவனையே மும்முறை வலம் வந்து அவள் பணிந்து எழுந்து தலைவணங்கி நின்றாள். அரிச்சந்திரனும் வாளை வீசுதற்குக் கையோங்கினன்.

"நில்! நில்!! நில்!!" என விரைவில் ஓடிவந்தார் விசுவாமித்திரர். 'மன்னா! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்? இத்துன்பமெல்லாம் உனக்கு ஏனோ? எனக்குக் கொடுத்த அரசை நீ 'நான் தந்ததில்லை' என்று ஒரு வார்த்தை சொல்லு. நீ ராஜ்யத்தை மீளவும் பெறுவாய்; இத்துயரெலாம் ஒழியும். கேட்டனையா?" என்றார்.

அரிச்சந்திரனுக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை; என்றாலும் கோபத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டு, "ஓ முனிவரே! நாங்கள் சத்திய விரதத்தை மேற்கொண்டோம், அதைக் காப்பாற்ற எங்கள், நாடிழந்தோம்; நகரிழந்தோம்; நிதி யிழந்தோம்; பதியிழந்தோம்; பாலனையும் இழந்தோம்; எதை யிழந்தாலும் மேலே நற்கதி ஒன்று உண்டென இருக்கின்றோம்' அக்கதியை யிழப்பதாயிருந்தாலும் எங்கள் வாக்கிழவோம்" என்றான். விசுவாமித்திரர் ஏதோ சொல்ல ஆரம்பித்தார். "சுவாமி! உம்

மிடம் உபதேசம் பெற எனக்கு விருப்பமில்லை; நீங்கள் உங்கள் காரியத்தைக் கவனித்துக்கொண்டு செல்லலாம்" எனக் கடிந்துரைத்தான் மன்னன். முனிவரும் ஒன்றும் பேசமாட்டாமல் வந்த வழியே தலை குனிந்து சென்றார்.

அரிச்சந்திரன் அதன்மேல் தன் கைவாளை யோங்கி, "இவள் பதிவிரதையாயும், குற்றமில்லாதவளாயும் இருப்ப துண்மையானால், நான் சத்தியந் தவறாதிருப்ப துண்மை யானால், உலகத்துயிர்கட்கெல்லாம் சிவபெருமானே தனி முதற் கடவுள் என்பதுண்மையானால், இவ்வாள் இவள் கழுத்தில் மாலையாய் விழக்கடவதாக' அன்றெனில் இவளை இருகூறு செய்வதாக" எனச்சொல்லி வீசினான். அவ்வாள் அவள் கழுத்திலே அரிச்சந்திரன் அன்றிட்ட மணமாலையாகி விழுந்தது. அதுகண்ட மன்னன் ஆனந்தத் தாண்டவமாடினான். அப்பொழுது பசுபதி அவன் முன்னர் இடபாருடராய்க் காட்சி தந்தருளி ஆசீர்வதித்து மறைந்தனர். அப்பொழுது சுடுகாடு யாக சாலையாகவும் காஷ்டங்கள் ஓமகுண்டங்களாகவும், அங்குள்ள துஷ்ட மிருகாதிகள் பசு, மான்களாகவும் மாறி நின்றன. இறந்து பட்ட தேவதாஸனும், காசிராஜன் பிள்ளையும் உயிர்த் தெழுந்தனர். விசுவாமித்திரர், வசிட்டாதியோர் அங் குத் தோன்றினர். விசுவாமித்திரர் அரிச்சந்திர மஹா ராஜாவிடம், தாம் செய்த கொடுமைகளை மறந்தருள வேண்டுமென வேண்டினர். அவர்க்கு, மன்னன், மறு மொழியாக, "சுவாமி! பொன்னின் ஒளியைச் சுட்டுக் காட்டுவார்' அதுபோல் என் குணச்சிறப்பைத் துன்பத் தீயிலிட்டு உலகிற்கு நீங்கள் காட்டினீர்கள்' ஆதலால் நீங் கள் செய்தது எல்லாம் எனக்கு நல்லனவே,' என்றான்.

விசுவாமித்திரர், முன் பந்தயமாகச் சொன்ன தவத் திற்பாதியை மன்னனுக்குத் தாரை வார்த்துக் கொடுத் தார். பின் அவனை முடிசூடி யரசாள வேண்டுமென வேண்டினர்.

அரிச்சந்திரன், தான் முன்னர்க் குடிகளிடம், "முனிக்கு யான் கொடுத்த மூதூரில் எக்காலமும் வருவதில்லை" என்று சொன்ன சொல்லுக்கு மாறு விளையக்கூடாதெனக்கூறி அரசாள மறுத்துவிட்டான்.

தேவேந்திரனுதியோர் வசிட்டரையும் அரிச்சந்திரனையும் மிகவும் புகழ்ந்து கொண்டாடினுர்கள். அன்று முதல் இன்று வரையில் உலகிலே வாய்மைக்கு அரிச்சந்திரன் ஒருவனேயல்லாமல் பிறரில்லை என்னும்படி அவன் புகழ் ஓங்கி நிற்கிறது.

---

## 5. புஷ்ப தந்தன்

இந்தியாவிற்கே பெருமை கொடுப்பது இமயமலை. அம்மலையிலிருந்து உற்பத்தியாகிப் பாய்வது புனித மிக்க கங்கை. அந்த நதியின் பெருமையை அறியாதார் உலகமே அறியாதாராவர்.

அப்படிப்பட்ட கங்கையின் கரையோரமாய் முன்னுவில் பஹுஸுவர்ணகா என்றெரு சிறு கிராமம் இருந்தது. அங்கு நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் முற்ற ஓதிய அந்தணர் குடியே அதிகம். அவ்வூர்வாழ் அந்தணாளரில் ஒருவர் கோவிந்த தத்தர். அவர் மனைவி பெயர் அக்கினி தத்தை. கோவிந்த தத்தருக்கு ஐந்து பிள்ளைகளுண்டு. அவர், தம் பிள்ளைகளிடம் வைத்த அன்பின் மிகுதியால் அவர்கள் மனம் போன போக்கிலே போகவிட்டார். துள்ளித்திரிகின்ற காலத்திலே பிள்ளைகளைத் துடுக்கு அடக்கிப் பள்ளிக்கு வைக்கவேண்டியது தந்தையின் கடமை. அவர் அது செய்யத் தவறிவிட்டார். அவருடைய பிள்ளைகளோ அத்தவற்றின் பயனுகத் தம் கடமையிலே தவறி விட்டார்கள். "தாயும் தந்தையும் இந்தப் பிள்ளையைப் பெற என்ன தவஞ் செய்தார்களோ?" என்று உலகம் புகழும்

படி நடக்க வேண்டியது பிள்ளைகள் கடமை. அவ்வா றன்றி அவர்கள் உலகம் இகழும்படி நடந்து வந்தனர்.

உலகிலே மக்கள் தங்களுடைய குலாசாரத்தில் தவறி ஞல் இழிவைப் பெறுவார். உயர்ந்த குலத்தில் பிறந்தாலும் என்ன பயனுண்டு? ஒழுக்கம் உடைமையே உயர் குடிப் பிறப்பாம்! இழுக்கம் உடைமை இழிந்த பிறப்பாய் விடு மன்றோ?

ஒருநாள் கோவிந்த தத்தர் வீட்டுக்கு வைஸ்வானரர் என்னும் பிராமணோத்தமர் சென்ருர். அவர் சென்ற போது கோவிந்த தத்தர் வெளியே சென்றிருந்தார்.

வைஸ்வானரர், கோவிந்த தத்தர் வீட்டில் இல்லை யென்று தெரிந்து அவருடைய மக்களிடம் சென்ருர்.

வைஸ்வானரரை அந்தப் பிள்ளைகள் வரவேற்று உப சரிக்கவில்லை. அதற்குமாருக அவரை இகழ ஆரம்பித்த னர். செருக்குடையார்க்குப் பணிவேது? வைஸ்வானரர் தம்மை அந்தப் பிள்ளைகள் மதியாது இகழ்ந்ததைக் கண் டார். மனங்கோதித்தார். "ஆஹா! இப்படிப்பட்ட முழு மூட மூர்க்கப் பிள்ளைகளையா கோவிந்த தத்தர் பெற்ருர்? என்ன புண்ணியம் இதற்கென்று செய்தாரோ?" என்று எண்ணி எண்ணி ஏழை நெஞ்சம் புண்ணுஞர். "மதியா தார் தலைவாசல் மிதிக்கவேண்டாம்" என்றபடி அவர், தாம் வந்த வழியே திரும்பிவிட்டார்.

அப்பொழுது வெளியே சென்றிருந்த கோவிந்த தத் தர் தம் வீடு திரும்பினுர். அவர் எதிரே வைஸ்வானரர் வரு வதைக் கண்டார். "சுவாமி! நமஸ்காரம். உம்முடைய வரவு நல்வரவாகட்டும்" என்று உபசார வார்த்தை சொன்ஞர்.

வைஸ்வானரருக்கோ அளவில்லாத கோபம். அத ஞல் கோவிந்த தத்தருடைய இன்சொல்லைக் காதிலே வாங்

கவேயில்லை. ஒரே பார்வையாக விறைத்துப் பார்த்துவிட்டு மேலே செல்லத் தலைப்பட்டார்.

கோவிந்தர்: சுவாமி! நீங்கள் இப்படி என்னைக் கோபித்துக்கொள்ள யான் என்ன தவறு செய்தேன்?

வைஸ்வாஸரர்: நீர் ஒரு தவறும் செய்யவில்லை.

கோவிந்தர்: பின்னை ஏன் என்னைக் கோபிக்கவேண்டும்?

வைஸ்வாஸரர்: உம்மை நான் கோபிக்கவில்லையே.

கோவிந்தர்: ஆயின் எனக்கு மறுமொழி கூறவும் முகங்கொடுக்காமற் செல்வதேன்?

வைஸ்வாஸரர்: அதற்குக் காரணம் சொல்கிறேன். கேளும். நான் உம்முடைய பிள்ளைகளால் அவமானம் செய்யப்பட்டேன். அதனால் மனம் நொந்தேன். அவர்கள் என்னை இகழ்ந்து நெடுநேரமாகி விடவில்லை. இப்பொழுது தான் அது நடந்தது. அதனால் அவர்கள் தந்தையாகிய உம்மைக் காணவும் எனக்கு மனம் ஒப்பவில்லை.

கோவிந்தர்: சுவாமி! ஈதென்ன காரியம்! என் பிள்ளைகள் தவறு செய்தால் நான் கண்டிக்கத் தக்கவனில்லையோ? உங்கள்பால் அவர்கள் ஒழுங்கீனமாய்நடந்துகொண்டதை நீங்கள் என்னிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்லவேண்டுமோ? சுவாமி! அவர்கள் பிராமணோத்தமராகிய உங்களிடம் என்ன அபசாரம் செய்தார்கள்? அதைச் சொல்லுங்கள். நான் அவர்களை அதற்குரிய தண்டனை செய்கிறேன்.

வைஸ்வாஸரர்: நீர் அவர்களைத் தண்டிப்பது ஒருபுறமிருக்கட்டும். முதலில் நீர்தாம் தண்டனைக்கு உரியவர். ஏனென்றால் உம்முடைய பிள்ளைகளை வளர்க்க வேண்டிய முறையில் நீர் வளர்க்கவில்லை. அந்தக் குற்றம் உம்முடையதே. உம்மை நீர் தண்டித்துக்கொள்ளும்.

கோவிந்தர்: சுவாமி! நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மையே. என் பிள்ளைகள்மேல் வைத்தபாசத்தால் அவர்களைக் கண்டித்து வளர்த்திலேன். அதனால் அவர்கள் நல்ல ஒழுக்கத்திலே குறைபாடுடையராய் விட்டார்கள். எனக்கும் அவர்களால் ஈனநிலை விளைவதாயிற்று. உங்களை ஒத்த உத்தமர்கள் மனம்நோவ நடந்துகொண்ட அந்தப் பிள்ளைகளை இனி நான் உடன்கொண்டு வாழ்வதில்லை. அவர்கள் தவறி நடந்து கொண்டார்களன்றோ? அதற்குப் பரிகாரமாய்த் தவம் புரிந்து நற்கெதி பெற்று உய்யட்டும், அல்லது ஒழியட்டும். யான் இனி அவர்கள் உறவுகொள்ளேன். இது சத்தியம்.

வைஸ்வானரர்: கோவிந்தரே! நீர் ஏன் இப்படி ஆத்திரப்பட்டுச் சபதம் செய்துவிட்டீர். நீர் இப்படிக் கொடிய சபதம் செய்ய நான் காரணமானேன் என்று நினைக்க என் மனம் வருந்துகின்றது. என்ன காரியம் செய்தீர்? இது தகுமோ?

கோவிந்தர்: சுவாமி! நீர் அறியாத தொன்றுமில்லை. பிள்ளைகள் பெற்றோர்க்கு நற்பெயர் விளைக்க நடந்து கொள்ளவேண்டும். அங்ஙனமில்லையானால் அவர்களே பெற்றோர்க்குப் பெரிய பகைவராவர். அப் பகைவரை உடன்கொண்டு வாழ்வார் உலகத்திலே உண்டோ? இல்லை. அதனால் யானும் என் பிள்ளைகள் என்னும் பெயர் கொண்ட குல சத்துருக்களை விட்டுப் பிரிகிறேன். என் செயல் அநிதமாகுமா?

இன்ப லக்ஷம் சொல்லி வைஸ்வானரரைத் தம் இல்லத்துக்கு அழைத்து வந்தார். விருந்து பண்ணி வைத்தார்; பின் தம் பிள்ளைகளை அழைத்தார். அவர்களிடத்திலே தம் முடைய சபதத்தைத் தெரிவித்து "இனி நீங்கள் இங்கு நின்றும் எங்கேனும் போய்விடுங்கள். நீங்கள் தவங்கள் செய்து உயர்கதி பெற்றாலும் சரி; அல்லது அவங்கள்

செய்து இழி நிலையுற்றாலும் சரியே, உங்களை என் புத்திரர் என்று இனி நான் கருதமாட்டேன்" என்றார். கோவிந்த தத்தர் மனைவியாகிய அக்கினி தத்தையும், 'தன் கணவன் கருத்தே தன'தெனக் கூறினள்.

பெற்றோர் சொல்லைக் கேட்ட பிள்ளைகள் உற்ற வருத்தத்தை இவ்வளவெனப் போதுமோ? ஒருநாளும் கோபியாத தந்தையும் தாயும் ஒரே காலத்தில் சீறிவிழுந்தது மட்டுமா? "நீங்கள் எங்கள் பிள்ளைகளில்லை. வீட்டை விட்டு வெளியேறுங்கள்" என்றால் அவர்கள் மனம் என்ன பாடுதான் படாது! அப்பொழுதுதான் அவர்களுக்குத் தங்களுடைய புத்திக் குறைவால் செய்த காரியத்தின் விளைவு தெரியவந்தது.

"ஐயோ! என்ன பேதைகளாய் விட்டோம்! உத்தமரான பெற்றோர் மனம் நோவச் செய்துவிட்டோமே." எனக் கவலையுற்றனர். உற்றாலும் என்ன பயன்? தாய் தந்தையர் அவர்களை வெளியேறவே சொல்லி விட்டார்களல்லவோ? அதனால் அவ்வாணையைத் தன்மேல் தாங்கிக் கண்கள் நீர் வடியத் தலை குனிந்தபடியே மெல்ல வீட்டைவிட்டு வெளியேறினார்கள்.

அவர்களிலே ஒருவன் தேவதத்தன், அவன் தன் பெற்றோரின் ஆணையை நினைந்து நினைந்து உருகினான். உலக வாழ்விலே அவனுக்கு வெறுப்பு விளைந்துவிட்டது. சிறிய தாய் உரையால் நெடுந்தவம் செய்த துருவனைப்போல் இவனும் உறுதிகொண்டு தவம் செய்ய நேர்ந்தான். அதனாலே அத் தவஞ் செய்தற்குத் தகவுடைய பதரிகாசிரமம் சென்றான்.

சென்றவன், மனத்தை யடக்கிச் சிவத்தை நினைத்து உடம்பை வருத்தித் தவத்தைச் செய்தான். சிவபெருமான் அவனுடைய தவத்தைப் பாராட்டி அவன் முன்

பிரசன்னமானுர். "அப்பா! தேவதத்தா! உன் தவத்தை மெச்சினேன். உனக்கு வேண்டும் வரம் கேள்; கொடுக்கிறேன்" என்று சிவபெருமான் அருள்புரிந்தார்.

தேவதத்தன்: 'எம்பெருமானே! அடியேன் உமது கணநாதர்களில் ஒருவனுகும்படி அருள்புரிய வேண்டும். இதுவே எனது விருப்பம்' என்ருன்.

சிவபெருமான்: "அப்படியே ஆகுக. ஆனுல் அன்பனே நீ முதலில் இவ்வுலகிலே இன்புற்று வாழ்ந்து அறிவுடையனுகிச் சிறப்புறுவாயாக. பின்பு மறுமையிலே என்னுடைய கணநாதரில் ஒருவனுகுவாய். உன்னுடைய இளமை நோக்கி நான் இவ்வண்ணம் பணிக்கின்றேன்" என்றருளி மறைந்தார்.

தேவதத்தன் அதன்பின் அவ்விடம் விட்டு நீங்கிப் பிரதிஸ்நானம் என்ற ஊரைச் சென்றடைந்தான். அந்த ஊரிலே கலைகள் எல்லாவற்றிலும் தேர்ந்த ஆசிரியர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் மந்திர சுவாமி. தேவதத்தன் அவரிடம் சென்று அடிபணிந்து நின்ருன்.

மந்திர சுவாமி: அப்பனே! நீ யார்? உனக்கு என்ன வேண்டும்?

தேவதத்தன்: சுவாமி! நான் கங்கைக் கரையிலுள்ள பஹுஸுவர்ணகா என்னும் ஊரினன். கோவிந்த தத்தர் என்னும் பிராமணேத்தமரின் குமாரன். என் தந்தை மனம் நோவும்படி நடந்து கொண்டமையால் அவர் என்னை வெறுத்தார். எனக்கு நால்வர் உடன் பிறந்தார் உண்டு. அவர்களும் என்னைப்போலவே தந்தையின் வெறுப்பிற்கு ஆளாயினுர்கள். அவர்களும் வெளியேற்றப்பட்டார்கள். சுவாமி! நான் அதனுல் மிகவும் மனம் வருந்தினேன். தந்தையின் கோபத்துக்கு ஆளாகும் தநயன் இருந்தென்ன? இறந்தென்ன? அதனுல் எனக்கு இப்பிறப்பிலே வெறுப்புண்டாகி விட்டது. பதரிகாசிர

மம் சென்றேன். தவம் செய்து சிவபெருமான் திருவடியைக் காணும் பேறும் பெற்றேன். அவர் இன்னும் சில நாள் உலகிலிருந்து விட்டுத் தம் கணநாதரில் ஒருவனாகும் படி என்னைப் பணித்தார். அதன் பின்னர் அங்கு நின்றும் இங்கு வந்தேன். தங்களுடைய திருவடியைத் தலைமேற் கொள்ளும் மாணாக்கனாய் இருக்க விரும்புகிறேன். அடியேனை ஏற்றருள வேண்டும்.

மந்திர சுவாமி: "நல்லது. உன் விருப்பம் அதுவாயின் எனக்குத் தடையில்லை. உன்னைப்போன்ற உண்மையாளர் கிடைப்பதும் ஒருவர்க்குப் பெரும் பாக்கியமே" என்றார்.

அன்று முதல் தேவதத்தன், மந்திர சுவாமியின் சிஷ்யனானான். சில காலத்திற்குள்ளே அநேக கலைகளில் அவன் வல்லவனுமானான்.

பிரதிஸ்தானத்தை ஆண்டுவந்த மன்னன் ஸுஸர்மன். அவன் மந்திர சுவாமியிடத்திலே மிகுந்த பயபக்தியுடையவன். மந்திர சுவாமி அடிக்கடி ஸுஸர்மனுடைய அரண்மனைக்குச் சென்று அவனோடு அளவளாவி விட்டு வருதலுமுண்டு. அந்த ஸுஸர்மனுக்கு ஒரு மகளுண்டு. அவளது பெயர் ஸ்ரீதேவி. அவள் சிறு வயது முதலே மந்திர சுவாமியை அறிவாள். மந்திர சுவாமி அரண்மனை சென்றால், அவளைக் காணாமல் வருவதில்லை. அவள் பச்சிளங் குழந்தையாய் இருந்தநாள் தொட்டே அவளை அவர் யறிவார்; அதனால் அவளுக்கு மந்திர சுவாமியுடன் தன் தந்தையிடத்துள்ள மதிப்புண்டு.

மந்திர சுவாமி ஒருநாள் ஸுஸர்மனிடம் சென்றிருந்தார். அவர் ஸுஸர்மனிடம் தம்முடைய சிஷ்யனை தேவதத்தனைப் பற்றிப் பாராட்டிப் பேச நேரிட்டது. அப்பொழுது அவர் தேவதத்தன் பால்யத்தில் தன் தாய் தந்தையர் மனம் நோக நடந்துகொண்டதும் இப்பொழுது அவன் மகா உத்தம குணசீலனாய் இருப்பதும் குறித்துச்

சொன்னர். "இப்படிப்பட்ட சிறுவன் என் சிஷ்யனனதே எனக்கு ஒரு பெருமை" என்ருர். அப்பொழுது அங்கு ஸ்ரீதேவியும் உடனிருந்தாள். இவ்வாறு பல விஷயங்களை யும் பேசிவிட்டு அவர் தமது இல்லம் அடைந்தார்.

ஸ்ரீதேவிக்குத் தேவதத்தனைக் காணவேண்டுமென்ற ஆசையுண்டாயிற்று. என்ருலும் தன் எண்ணத்தை யாரிடம் தெரிவிக்க முடியும்? 'தக்க சமயம் வாய்க்க வேண்டுமே' என வெண்ணியிருந்தாள்.

ஒருநாள் தேவதத்தன் ராஜவீதி வழியே சென்று கொண்டிருந்தான். பொன்னலும் மணியாலும் இழைத் துச் சந்திர மண்டலம் வரையும் ஓங்கி யிருக்கும் மாட மாளிகைகளின் அழகு அவன் கண்களைக் கவர்ந்தது. அண்ணாந்து பார்த்த வண்ணம் மெல்லச் சென்று கொண் டிருக்கும் அவனை அரண்மனை உப்பரிகைமேல் நின்ற ஸ்ரீதேவி கண்டாள். தேவதத்தனுடைய முகவிலாசத்தை யும் இளமையையும் கண்டதும் அவளுக்கு மனம் பூரித்துவிட்டது. "மந்திர சுவாமி வர்ணித்துக் கூறிய லக்ஷணங்களை இவன் உடையனயிருக்கிருன். இவன் தான் அவர் சிஷ்யனை தேவதத்தனகவேண்டும்" என்று நினைத் தாள். அப்பொழுது அவளுக்கு உண்டான உணர்ச் சியை என்னென்பது?

அண்ணாந்த வண்ணம் செல்கின்ற, தேவதத்தன் கண் களுக்கு உப்பரிகைமேல் நிற்கும் ஸ்ரீதேவியின் உருவம் புல னயிற்று. "ஆஹா! இவ்வரசிளங் குமரி எவ்வளவு அழகா யிருக்கிருள்! இவளை மணப்பவன் மிகுந்த தவ முடையனகல் வேண்டும்!" என்று எண்ணி வியந்திருந் தான். அப்பொழுது அவள் அவன்காண அருகிலிருந்த ஒரு ரோஜாப் பூவை எடுத்துத் தன் பற்களாற் பற்றிக் கொண்டாள். சிறிதுநேரம் பூவைக் கவ்விய வண்ணம் தேவதத்தனைப் பார்த்து நின்ருள். பிறகு அதனைத் தன்

வாயிலிருந்து அப்பால் எறிந்து விட்டு உள்ளே சென்று விட்டாள்.

அவள் செய்கையைக் கண்ட தேவதத்தன் சித்தப் பிரமை கொண்டான். அவனுக்கு ஒன்றும் புலப்பட வில்லை. 'அரசிளங் குமரி, தன்னை நோக்கியே ஏதோ ஒரு பொருள் படும்படி அந்தச் சாடை செய்திருக்க வேண்டும்' என்பது மனத்திற் பட்டது. அப்படியே சிறிது நேரம் அங்கு நின்று விட்டுத் தன் குருவின் ஆசிரமத்தை அடைந்தான். அவனுக்கு வேறொன்றிலும் மனஞ் செல்லவில்லை.

அப்பொழுது வெளியே சென்றிருந்த மந்திர சுவாமி வந்து சேர்ந்தார். அவரைக்கண்டதும் எழுந்தடிவணங்கு பவன் அன்று அது செய்யவில்லை. அலக்ஷ்யமன்று காரணம்; அவர் வருவதை யறியாமல் உன்மத்தன் போல அவனிருந்ததேயாகும். மந்திர சுவாமிக்குத் தேவதத்தன் ஏதோ வியாகுல சிந்தையனானான் என்று தெரிந்துவிட்டது. உடனே அவன் அருகிலே அவர் சென்று நின்றார். அப்பொழுதுதான் அவன் அவர் வரவை யுணர்ந்து எழுந்து அடி பணிந்தான்.

குரு:—அப்பா! தேவத்த்தா! இன்று முகவாட்ட முற்றிருக்கிறாயே? என்னே காரணம்?

தேவதத்தன்:—நான் அதைச் சொல்லக் கூடாதவனா யிருக்கிறேன்.

குரு:—அப்பா! குருவினிடம் எதையும் சொல்லலாம். தீயவாயினும் அவரிடம் சொல்வதால் நலமுண்டு. அப்படிச் செய்வதால் அவர் அவற்றிலுள்ள விளைவுகளை எடுத்துக் காட்டித் தடுக்கவும் வல்லராவர். சீடரும் தீவினை செய்ய இடமிராது. ஆதலால் ஏதாவது தவறு நீ செய்திருந்தால் மறையாமல் சொல். அதன்மேல் செய்யவேண்டுவன சொல்லுகிறேன்.

குருவின் வார்த்தையை மீருத குணமுடையவன் தேவதத்தன்; ஆதலால் அவனுக்கு அதன்மேலும் விஷயத்தை மறைத்துக் கொள்ளத் துணிவுண்டாகவில்லை. அதனல் அவரைப் பார்த்து, "சுவாமி! இன்று ஒரு கன்னிப் பெண்ணைக் கண்டேன். அவளும் என்னைக்கண்டாள். நான் அவளுடைய அழகை வியந்துகொண்டிருந்தேன். அப்பொழுது அவள் ஒரு பூவைப்பல்லாற் கவ்வி விட்டெறிந்து விட்டுப் போனள். அவள் செய்த குறி எனக்குத் தெரிவித்த ஒரு செய்தி போலத் தோன்றியது. அது இன்னது எனத் தெரியாமல் திகைத்துச் சோர்ந்தேன். வேறு எந்தக் கவலையும் எனக்கில்லை" என்றான்.

குரு:—இவ்வளவு தானு! இதற்கு இவ்வளவு திகைப்பு வேண்டுமா? உனக்கு அதன்பொருள் இன்னும் விளங்க வில்லையா?

தேவதத்தன்:—சுவாமி! எனக்கு அதன்பொருள் விளங்கி விட்டால் நான் என் கவலை கொள்ளவேண்டும்?

குரு:—சரிதான்! பூவிற்குச் சமஸ்கிருதத்திலே என்ன பெயர்?

தேவதத்தன்.—புஷ்பம்.

குரு:—பல்லுக்கு என்ன பெயர்?

தேவதத்தன்:—தந்தம்.

குரு:—அப்பா! தேவதத்தா! உன்னைப்போல இவ்வளவு குறிப்பறிய மாட்டாதவனை நான் கண்டதேயில்லை. நம்மூரிலுள்ள கோயிலிலே இருக்கும் சுவாமி பெயர் என்ன?

தேவதத்தன்:—புஷ்பதந்த நாத சுவாமி.

குரு:—உனக்கு இன்னும் பொருள் விளங்கவில்லையா?

தேவதத்தன்:—இல்லை, சுவாமி!

குரு:—அந்தப் புஷ்பதந்த நாதர் கோவிலுக்கு 'உன்னை வரச்சொல்லி யிருக்கிருள். விரைவிலே அங்குச்செல்.

தேவதத்தனுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவேது? உடனே எழுந்தான்; குருவை அடிபணிந்தான். விரைந்து சென்று கோவிலிலே சுவாமியைச் சேவித்தான். அங்குள்ள நந்தவனத்திலே தங்கியிருந்தான்.

ஸ்ரீதேவி அந்த அந்தி மாலையிலே சுவாமியைத் தொழுவதுபோலக் கோயிலையடைந்தாள். பிராகாரத்தி லுள்ள நந்த வனத்தில் தேவதத்தனைக் கண்டாள். அவள் மனம் பூரித்து விட்டது. மெல்லச் சென்று அவனை நோக்கினள். தேவதத்தனும் அவள் வந்தது கண்டு அளவிலா ஆநந்தமுற்றான்.

ஸ்ரீதேவி: "நீங்கள் நான் செய்த குறியின் பொருளை அதி சுலபமாய் அறிந்துகொண்டு விட்டீர்களே" என்று தேவதத்தனைப் பாராட்டிச் சொன்னாள்.

தேவதத்தனோ உண்மையே பேசுபவன். அதனால் அவளை நோக்கி, "ஏ பெண்ணே! என் குருவின் திருவருளால் அப்பொருளை யுணர்ந்தேன்" என்றான். ஸ்ரீதேவிக்கு அவன் வாய்ச்சொல்லைக் கேட்டதும் உடலெல்லாம் சில் லிட்டுவிட்டது. "ஐயோ! மந்திர சுவாமிக்கு நம்முடைய செயல் தெரிந்துவிட்டதே. அவர் நம்மை இனி மதிப்பாரா? நாம் முன்பின் பாராமல் செய்த காரியம் நமக்குக் கேவலமான பழியை உண்டாக்கிவிட்டதே" என நினைந்து வருந்தினள். சற்றும் மனம் பதறாமல், தேவதத்தனை நோக்கி, "நீங்கள் அவரிடம் என்ன சொன்னீர்கள்?" என்றாள்.

தேவதத்தன்:—'ஒரு கன்னிகை என்னைக் கண்டதும் பூவைப் பல்லாற் கவ்வி விட்டெறிந்து சென்றாள். அதன் பொருள் என்ன?' என்று கேட்டேன். அவர், "புஷ்ப தந்தத்துக்கு நீ வா" என்பதுதான் அதன்பொருள் என்றார். நான் இங்கே வந்தேன். நான் உன்னை ராஜ குமாரி என்றறிவேன். அதனால் அக்குறியை நீ செய்தாய் என்று அவரிடம் கூறவில்லை.

ஸ்ரீதேவி: "அதுவும் என்னுடைய நல்ல காலமே. நான் உம்மைக் காதலித்துவிட்டேன். இனி நான் பிறரை நேசிக்கமாட்டேன். உம்மை இங்கே கண்டு மகிழ்ந்திருக்க எண்ணினேன். அது இனிக்கூடாது. இங்கு நான் வருவது பிறர்க்குத் தெரிவதே மோசம். அதிலும் மந்திர சுவாமி அறிவது முற்றிலும் ஆகாது. ஆதலால் இனி உம்மை நான் விட்டு நீங்கவேண்டியதே" என்று கூறினாள்

இவ்வாறு சொல்லிய வண்ணமே கதுமென அவள் அரண்மனைக்கு மீண்டுச் சென்றிட்டாள். தேவதத்தனோ கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லை என்றபடி அவளைக் கண்டும் இன்னுரையாடி மகிழ்ச்சியடையாமற்போனதை நினைத்து மனமுறுகினான். அவன் தனதறியாமையை எண்ணி வருந்தினான். பெரும்பொருள் கிடைக்கப்பெற்ற ஓர் பரமதரித்திரன் அப்பொருளை எய்திய உடனே இழந்தால் எப்படித் துன்புற்றுத் தவிப்பனோ அப்படித் தவித்தான். ராஜகுமாரி செல்லும்பொழுதே அவனுடைய அறிவையும் கொள்ளைகொண்டு விட்டபடியால் அவன் தன்னுயிரை மாய்த்துக்கொள்ளத் துணிந்து விட்டான்.

சிவபெருமான் அப்பொழுது அவனுடைய நிலைக்கு மனமிரங்கினார். தம்முடைய கணநாதரில் ஒருவனாகிய பஞ்சசிகனை அழைத்தார். அவனை நோக்கி "தேவதத்தன் நம்முடைய வரத்தைப் பெற்றவன். அவன் உலக இன்பங்களை அநுபவித்துப் பின் நம்முடைய கணங்களில் ஒருவனாக வேண்டியவன். அவன் இன்று ஸுவர்மன் மகளாகிய ஸ்ரீதேவி தன்னை விட்டகன்றமையாலே உன்மத்தமனாகி, உயிர்துறக்கத் துணிகின்றான். அச்செயலினின்றும் நீ அவனைத் தடு. ஸ்ரீதேவியை அவன் மணந்துகொள்ளும் உபாயமும் செய்துவா" என்று பணித்தருளினார். பஞ்சசிகன் அவ்வாணையைத் தலைமேற்கொண்டு ஓர் கிழட்டுப் பிராமண வடிவிலே புஷ்பதந்தர் கோயிலையடைந்தான்.

அவன் அடைந்த பொழுதிலே தேவதத்தன் அங்குள்ள ஒரு கிணற்றில் விழத் தலைப்படுவானுயிருந்தான். பஞ்சசிகன், "யாரப்பா அங்கே? சற்று நில்! என்றான்.

தேவதத்தன் திடுக்கிட்டுத் திரும்பி நின்றான்.

பஞ்சசிகன்: "என் அப்பா! இது ஒரு தேவாலயம் என்பதையும் மறந்தாயோ? என்ன காரியம் செய்யத் துணிந்துவிட்டாய்? ராஜகுமாரி உன்னை வெறுத்துச் செல்லவில்லையே! நீ என் உயிரை மாய்த்துக் கொள்ள வேண்டும்? நீ இறந்தால் உன்னைக் காதலிக்கும் அவளு மன்றோ உயிர் துறப்பாள்? தற்கொலை செய்துக்கொண்ட பாவம் உனக்கு, அது மட்டுமோ? பெண்பாவமுன்றோ அத்தோடு சேர்கிறது! இப்படிச் செய்வதுதான் அன்புடையார் செயலோ?" என்றான்.

தேவதத்தனுக்கு அப்போது உண்டான உணர்ச்சியை என்னென்பது? அச்சமென்பதோ? அதிசயம் என்பதோ? இளிவரலென்பதோ? அசைவென்பதோ? "இவர் யாரோ கிழட்டுப் பிராமணர்; நாம் ராஜாகுமாரியைக் காதலித்ததும் அவள் தன் காதலைச் சொல்லிவிட்டுச் சென்றதும் இவர்க்கு எப்படித் தெரியவந்தன? ஈதென்ன மாயமோ? என்று பிரமித்துப் பேச நாவெழாமல் அசைவற்று நின்றான்.

அவன் நிலைமை கண்ட பஞ்சசிகன், அவனைத் தேற்றி, "அப்பா! உன்னை நான் அறிவேன். என்னை நீயறியாய் என்னை நீ அறியும் காலம் இதுவன்று; ஆதலால் அறிய விரும்புதலும் வேண்டா. நான் உன்னுடைய நல்ல குணத்தை மெச்சினேன். உனக்கு என்னுலான நன்மையைச் செய்கிறேன். ஆனால் நீ மட்டும் நான் சொல்லுகிறபடி செய்ய வேண்டும். அதற்கு மனமிசைந்தால் நீ ஸ்ரீதேவியைப் பிரியாமல் கூடி வாழும்படி செய்து வைக்கிறேன்" என்றான்.

தேவதத்தன் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டான். அவனுக்கு எப்படியாவது ராஜகுமாரியை அடைய வேண்டுமென்ற ஆசை; ஆசை வெட்கமறியாதன்றோ?

பஞ்சசிகன், தேவதத்தனை ஓர் அழகிய பெண்ணுருக் கொள்ளச் செய்தான். தேவதத்தனை அப்பொழுது அவன் தாய் கண்டாலும் அவனைத் தன் மகன் என்று அறிந்து கொள்ள முடியாது! அப்படிப் பொருத்தமான வேஷம்! காதல் செய்யும் கூத்துத்தான் என்னே!

ஸுஸர்மன் கொலுவிலே இருக்கிறான். அங்கே சென்றார் ஒரு கிழட்டுப் பிராமணர். அவர் பின்னே அழகிய ஓர் யுவதி தொடர்ந்திருக்கிறாள். இவர்கள் யாரென்று சொல்லவும் வேண்டுமா? இவர்கள் தான் பஞ்சசிகனும் தேவதத்தனும்.

ஸுஸர்மன் தன் முன்னே வந்த கிழட்டுப் பிராமணரை வணங்கி யுபசரித்தான். அவரும் அவனை ஆசீர்வதித்தார். அவரை நோக்கி, சுவாமி! நீங்கள் இங்கு வரப் பெற்றமையால் என்னுடைய வாழ்வு புனித முற்றது. உங்களுக்கு என்னாலாகவேண்டியது ஏதேனும் உண்டெனின் அதைச் செய்து கொடுக்கச் சித்தனாயுளேன்" என்று ஸுஸர்மன் சொன்னான்.

பஞ்சசிகன்: "ஸுஸர்ம ராஜனே! என்னைப் போன்ற முது வேதியர்க்கு இவ்வுலகில் வேண்டியதென்னுண்டு? எல்லாம் வல்ல ஈசனருளால் யாதொரு குறையுமில்லை இங்கு உன் திருமுன் யான்வந்ததும் ஒரு வினை கருதியேயாகும். இதோ பார்! இவள் என் மருமகள். எனக்கு ஒரு மகனுண்டு. அவன் வீட்டை விட்டுச் சென்றவன் வருஷம் ஒன்றாகியும் மீண்டானில்லை. அவனுடைய செய்திகளை யறிந்து வர வேண்டி யான் செல்வதானேன். ஆனால் அதுவரையும் என் மருகியான இவளைத் தக்க மகளிர் காவலுடைய இடத்தில் சேமமாய் இருத்துவதற்கு

வேறு தக்க இடங்காண்கிலேன். அதனால் உன்னிடம் அழைத்து வந்தேன். இவளை உன் மகள் ஸ்ரீதேவியோடு இருக்கச்செய்து பேணி வருதல் வேண்டும். யான் சென்று என் மகனைக் கண்டு செய்தி கொண்டு மீண்டும் இவளை அழைத்துச் செல்கின்றேன். அது வரையும் நீ காத்தளிப் பயோ?" எனக் கேட்டான்.

ஸுஸர்மன்: "சுவாமி நன்று கூறினீர்! வேறொன் றும் கேளாமல் உம் 'மருகியை' என் மகளோடும் வைத் துப் பேண வேண்டுகிறீர். இதுகூடச் செய்யமாட்டேனா யின் யான் அரசனென்றிருந்தென்ன? இறந்தென்ன? உலகத்துயிர்களைக் காக்கும் பொறுப்புடையோனுக்கு உம் மருகியைக் காக்கவேண்டியது பொறுப்பாகாது போகு மோ? இவளை நீ பேணிக் காக்கவேண்டுகிறேன் என்று நீர் என்னை வேண்டவும் வேண்டுமோ? நீர் கட்டளையல்லவோ இட்டிருக்கவேண்டும்?" என்று இன்மொழி கூறி அவளைப் பேணுவதாக உறுதியளித்தான். பஞ்சசிகன் அதன்மேல் அரசனிடம் விடைபெற்றுக்கொண்டு போய் விட்டான். ஸுஸர்மன் தேவதத்தனை அந்தப்புரத்தில் அனுப்பி வைத்தான்.

அந்தப்புரத்தில் ஸ்ரீதேவி தன்னுடன் இருக்க வரும் புதுப்பெண்ணைக் கண்டாள். அவளுக்கு அவளைக் காணவே மனமகிழ்ச்சி யுண்டாயிற்று. பெண்வடிவிலுள்ள தேவ தத்தனுக்கு அந்தப்புரத்தில் ஸ்ரீதேவியைக் கண்டபோ துண்டான உணர்ச்சியை அறிந்துரைக்க யாரால் முடியும்?

தேவதத்தன் ஸ்ரீதேவியுடன் வாழ்வதாகிய நாளிலே ஒருநாள் வேறெவருமில்லாத தருணம் பார்த்து ஸ்ரீதேவி யிடத்தில் தன்னைப்பற்றிய உண்மையை வெளியிட்டான். அவள் முதலில் அதை நம்பவில்லை. அவன் அவள் ஐயம் ஒழியும் வண்ணம் தன் உண்மையுருக்காட்டலும் அவள் அதிசயித்தாள். என்றாலும் அவன் அவள் காதலனே

யன்றோ? மனமொப்பிக் காந்தருவமணம் அவ்விருவரும் செய்துகொண்டனர்.

இங்ஙனமிருக்கையில் ஒருநாள் தேவதத்தனை நோக்கி ஸ்ரீதேவி, "ஆருயிர்த் தலைவரே! இன்னும் எத்தனை நாளைக்கு இவ்வாறு களவொழுக்கம் நடைபெறுவதோ? யாரேனும் அறிய நேரின் குலமானம் கெடுவதாகுமே" என்றாள்.

தேவதத்தன்: "என் அன்பே! நீ சொல்வது சரியே. இதை ஒரு வழியாய் முடித்துக்கொள்ளவும், உலகறிய உன்னைக் கடிமணஞ் செய்துகொள்ளவும் யான் விரும்புகின்றேன். என்றாலும் என்னைப் பெண் வடிவிலே இங்கே அனுப்பிய அப்பெரியவர் வரவை எதிர்பார்த்திருக்கிறேன். அவர் தக்க சமயத்து உதவிக்கு வருகுவர். அவராலன்றோ உன்னை நான் இங்குக்கூடி மகிழ்ந்திருக்க இயன்றது?"

ஸ்ரீதேவி: "அவர் இனி வாராதிருந்து விட்டாலோ?" என்று கேட்டாள்.

தேவதத்தன்: அந்த எண்ணமே உனக்கு வேண்டாம். 'என்று நீ என்னை நினைப்பாயோ அன்று உன் கருத்தின்படி உதவி செய்ய வருவேன்' என்று எனக்கு அவர் உறுதிசொல்லி யிருக்கிறார். அதனால் அவர் வராதிருப்பரென்று யான் எண்ணமாட்டேன். அவர் என்ன உபாயத்தால் உன்னை யான் கடிமணம் செய்யக் கருதி யிருக்கிறாரோ! அவர் விரும்பியவாறே செய்யட்டும். அவர் செய்வன எல்லாம் நம்முடைய நன்மைக்கே; எனின் அதைக் குறித்துப் பல நினைந்து கவலுவானேன்; என்று கூறினான்.

ஸ்ரீதேவி அவனுக்கு மறுமொழி யொன்றும் கூறவில்லை. அவளுக்கு அவனுரையால் ஒரு புறம் சற்றே தைரியம் பிறந்தது; மற்றொரு புறம் அச்சம் மிகுந்தது. இப்படியிருக்கும்போது அவர்கள் முன் அந்தக் கிழட்டுப்

பிராமணர் தோன்றினர். ஸ்ரீதேவி ஈதென்ன மாயமா யிருக்கிறது! என்று திடுக்கிட்டாள். தேவதத்தன் அவரை அடி வணங்கினன்.

பஞ்சசிகன்: "ஏ பெண்ணே! அஞ்சாதே! உனக்குச் சர்வமங்களமு முண்டாகுக. இதோ நிற்கும் உன் காதல னாகிய தேவதத்தன் மஹா சிவபக்தன். தான் செய்த தவத் தின் பயனாய்ச் சிவபெருமானை நேரிற்காணப்பெற்று வரங் கொண்டவன். அவராலே இவ்வுலகில் பல சுகபோகங்களை யும் அநுபவித்துப் பின் சிவ கணங்களில் ஒருவனாதற்குரி யன். இவனை நீ அன்று பிரிய, இவன் தன் உயிரைப்போக் கத் துணிந்தான். அப்பொழுது சடைமுடிப் பெருமான் ஆணையால் யான் இவனைத் தடுத்து ஈண்டுக்கொண்டு வந்து உங்களிருவரையும் சேர்த்து வைத்தேன். இனி நீங்கள் கடிமணம் புரியும் வகையைத் தாமதியாது இன்றே செய் வேன். கலங்க வேண்டா. ஒருவரும் அறியாதபடி தேவதத் தனை யான் அழைத்துச் செல்கிறேன். பின்னர் உன் தந்தையை வந்து கண்டு மணமுடித்து வைக்கிறேன்" என்று சொல்லித் தன் தெய்வ வல்லமையால் பிறரறியா மல் தேவதத்தனை யழைத்துப் போய்விட்டான்.

மறுநாட் காலை, ஸுஸர்மனிடம் அந்த விருத்தப் பிராமணர் வந்து சேர்ந்தார். வந்த முது வேதியரை அடி பணிந்து, "சுவாமி! நீங்கள் சென்று சில மாதங்களாகின் றனவே! உங்கள் புதல்வனைக் காணப் பெற்றீர்களா? அவன் ஒரு குறையுமிலனே?" என்றான் ஸுஸர்மன்.

பஞ்சசிகன்: "ஸுஸர்ம ராஜனே! உனக்கு மங்கள முண்டாகுக. ஈசன் திருவருளால் என்மகனைக் காசியிற் கண்டுகொண்டேன். அவன் அங்கே கடுந்தவம் செய்து கொண்டிருக்கிறான். என் மனமும் ஆறுதலை யடைந்தது. அங்குத்தானே நான் என் குடும்ப சகிதம் சென்றுவிட எண்ணியிருக்கிறேன். அதனால் ஈண்டுவந்தேன்; என் மருமகளை இன்று வரை பாதுகாத்துதவிய உனக்கு ஈசன்

நல்லருள் புரிவானாக. இப்படி உத்தமகுண சீலர்களாய் மன்னர் உலகைக் காப்பாற்றினால், உயிர்களுக்குக் குறை யென்றுண்டாம்? தேவலோக வாழ்க்கை வேண்டற்பாற்றன்று உன் குடைக்கீழ் வாழ்பவர்க்கு! அரசே! என் மருகியை யான் அழைத்துச் செல்லவேண்டும். அனுப்பி வைப்பாய்'' என்றான்.

ஸுஸர்மன்: "நல்லது அப்படியே செய்யுங்கள். உங்களைப்போன்றார் உளமுவந்து உரைக்கும் ஆசியே என் போன்ற அரசர்க்குப் பேறாகும்'' என்றான்.

இவ்விதம் மறுமொழி கூறி, ஸுஸர்மன் தன் ஏவலாளரை அந்தப்புரமனுப்பி அந்தப் புதுப்பெண்ணை அழைத்து வரக் கட்டளையிட்டான். காவலர் கடுகிச்சென்றார். செய்தி தெரிந்தார். வாடிய முகத்தராய் அரசன் திருமுன் மீண்டார். ஸுஸர்மன் அவர் முகத்தைக் கண்டதும் திடுக்கிட்டான்.

ஸுஸர்மன்:—அந்தப் பெண்ணை ஏன் அழைத்து வரவில்லை.

காவலர்:—மன்னர் மன்ன! மன்னிக்கவேண்டும். அந்தப் பெண் எப்படியோ மாயமாய் மறைந்து போய் விட்டாளாம்.

பஞ்சசிகன்:—ஆ! தெய்வமே!

ஸுஸர்மன்:—மறைந்து விட்டாளா? ஈதென்... ஆச்சரியம்! அவள் என்ன ஓர் தெய்வப் பெண்ணா? இல்லையே! எப்படி மாயமாய்ப் போய்விடுவாள்? அதுவும் நேற்றிரவிலா? யாரடா சேவகா! என் மகள் ஸ்ரீதேவியிடம் செய்தியை அறிந்துவா.

சேவகன் ஓடிச்சென்றான். ஸ்ரீதேவியை அடைந்தான். அவனிடம் அவள், "அந்தப் புதுப்பெண் எப்படித்தான் மாயமாய் மறைந்தாளோ! அதை யான் அறியேன். அவள் நேற்று என்னோடு நெடுநேர மிருந்தாள்'' என்று

சொல்லியனுப்பினள். அவள் செய்தியை ஸுஸர்மனிடம் அவன் சென்று தெரிவித்தான். ஸுஸர்மனுக்கு மனம் உடைந்து விடும்போலிருந்தது. "அடாடா! சற்று முன்பு தான் இந்தப் பிராமணர் தம்மருகியைப் பேணியதற்காக நம்மைப் புகழ்ந்தார். அவர் புகழ்ந்த மறுகணமே இகழும் படியான நிலையிலானேமே!" என்று மிக வருந்தினன்.

பஞ்சசிகனே வேஷம் எடுத்ததற்கேற்ப நடிக்கவேண்டியவன். அதனால் அவன் விம்மிப் பொருமி அழுது புலம்பினன். மன்னனைப் பார்த்தான். கண்களிலே கோபப்பொறி பறக்கத் தலைப்பட்டது. "ஏ ஸுஸர்ம ராஜனே! நீ நல்ல காரியம் செய்தாய். அடைக்கலப் பொருளை மிகவும் நன்ருகக் காப்பாற்றி விட்டாய்! அடடா! உன்னை இவ்வளவு மதிமந்தன் என்றறியேனே! நீ அப்போதைக்கப்போது என் மருகியின் க்ஷேமத்தை விசாரித்துக் கவனித்திருந்தால் இது நிகழ்ந்திருக்குமா? எல்லாம் உன்னுடைய அசாக்கிரதையாலே விளைந்தன. என் மகன், 'எங்கே என்னுடைய மனைவி?' என்ருல் எதிரேது சொல்லுவேன்? உலகம் உன்னை என் சொல்லாது? ஒரு குடும்பமல்லவோ இதனாலே தட்டுக்கெட்டுப் போவதாயிருக்கிறது? என்று பலவும் சொல்லிப் பழிப்பானுன்.

ஸுஸர்மன், அந்தக் கிழட்டுப் பிராமணரை ஒருவாறு தேற்றி, 'சுவாமி! நீங்கள் இதற்காகக் கவலைப்பட வேண்டா. என்னுடைய மகள் ஸ்ரீதேவி இருக்கிருள். அவளை உம் மகனுக்கு மணமுடித்து வைக்கிறேன். 'மாயமாய் மறைந்த பெண்ணைத் தேடிக் கொடு' என்று என்னை வற்புறுத்தாதீர். அவளை எங்கு சென்று தேடுவேன். என் மகளோ அழகிலும் குணத்திலும் செல்வத்திலும் வயதிலும் எவ்வளவும் உமது மருகிக்குத் தாழ்ந்தவளோ? அல்லள்; ஆதலால் என் மகளை உமது மருகியாக ஏற்றுக் கொள்ளும், என்ருன்.

கிழட்டுப் பார்ப்பானுன பஞ்சசிகன் முதலில் மனமில்லாதவன்போல நடித்துப் பின் அதற்கு இணங்கினன். இணங்கினவன் "நான் காசி சென்று என் மகனை ஈண்டு அழைத்து வருகிறேன்; பின் மணமுடித்து கொடுப்பாயாக, என்ருன். பஞ்சசிகன் போய்விட்டான்.

சில வாரங்கள் சென்றன. பஞ்சசிகன் தேவதத்தனை வேற்றுருவில் அழைத்து ஸுஸர்மனிடம் சென்ருன். ஸுஸர்மன் தேவதத்தனுக்குத் தன் மகளை மணஞ்செய்து கொடுத்தான். அதன்பின் பஞ்சசிகன் ஸுஸர்மனைத் தனியே அழைத்து, அவனிடம் உண்மைகளைச் சொல்லினன். ஸுஸர்மன் வியப்புற்ருன். ஸுஸர்மனுக்கு ஸ்ரீதேவியை ஒழிய வேறு மக்களில்லை. அதனல் அரசைத் தன் மருமகனுகிய அவனேயாளக் கொடுத்துத் தான் தவத்தின்மேற் சென்ருன்.

தேவதத்தனை ஆசிர்வதித்துப் பஞ்சசிகன் சென்ருன். தேவதத்தன் தன் காதலியாகிய ஸ்ரீதேவியோடும் அரசவின்பங்களை இனிது நுகர்ந்து நீண்டநாள் வாழ்ந்து பின் தவத்திற் சென்ருன். அவன் சடைப் பெருமான் திருவடியிணையே தியானிப்பவனுய் இருந்து பின் இம் மண்ணுலக வாழ்வை நீங்கினன். ஸ்ரீதேவியும் அவனைப் பின் பற்றினள்.

சிவபெருமான் அருளிய வரத்தின்படி தேவதத்தன் சிவகண நாதரில் ஒருவனுனன். ஸ்ரீதேவி மறுமையில் அவனைப் பிரியாத தெய்வ வாழ்வு பெற்ருள். தேவதத்தனுடைய மண்ணுலக வாழ்வெல்லாம் ஸ்ரீதேவி செய்த குறியால் சிறந்தனவாதலின், அந்த ஞாபகமிருக்கத் தேவதத்தன் 'புஷ்பதந்தன்" என்னும் பெயரினனுனன். ஸ்ரீதேவி ஜயா என்னும் பெயரினளானள். புஷ்பதந்தன் சிவபெருமானுக்கும், ஜயா உமா தேவியார்க்கும் அந்தரங்கமுள்ள அன்பராய்ச் சிறந்தனர்.

---

Printed at Commercial Printing & Publishing House, G. T., Madras.
P. I. Card Q. H. No. MS 120 for M/S V. S. Swaminathan,
P. I. Card Q. H. No. MD. 23—1000.